# வேதாந்த சாஸ்திர பலதிரட்டுப் பாடல்.

இது கோவிலூர் பரம்பரை, சத்திரப்பட்டி
ஸ்ரீலஸ்ரீ சுப்ரமணிய ஞான தேசிக சுவாமி
அவர்களாதீனத்தின் வழிவந்த
சிவகாசி மாநகர்க்கருகிலுள்ள விஸ்வநகர்
ஸ்ரீலஸ்ரீ சண்முகானந்த ஞான தேசிக
சுவாமியவர்களின் பிரதம சிஷ்யையும், ஆத்ம
ஞானியுமான, மதுரை ஜில்லா, திருமங்கலம்
தாலூகா, பேரையூர் ஜமீன் சுப்புலாபுரம்

**சாது-நித்தியானந்தம்மாள்**

அவர்களால் இயற்றப்பெற்று,
அவருடைய சீடராகிய, வன்னிவேலமாநகர்
திரு. வே. கிருஷ்ணசாமி அவர்களால்
தொகுக்கப்பெற்று
மதுரை, ஸ்ரீ மீனாம்பிகை பிரஸில்
...பிக்கப்பெற்றது.

1958. [விலை ரு. 0-12-0

ஓம் தத் சத்.

பரப்ரஹ்மணே நம:

# வேதாந்த சாஸ்திர

# பலதிரட்டுப் பாமாலை.

இது கோவிலூர் பரம்பரை [illegible]

ஸ்ரீலஸ்ரீ [illegible] ஞான தேசிக ஸ்வாமி

அவர்க[illegible]த்தின் அ[illegible]

சிவகிரி மாநகர்க்கருகிலுள்ள [illegible]நகர்

ஸ்ரீலஸ்ரீ சண்முகானந்த ஞான தேசிக

சுவாமியவர்களின் பிரதம சிஷ்யையும், ஆத்ம

ஞானியுமான, மதுரை ஜில்லா, திருமங்கலம்

தாலூகா, பேரையூர் ஜமீன் சுப்புலாபுரம்

**சாது-நித்தியானந்தம்மாள்**

அவர்களால் இயற்றப்பெற்று,

அவருடைய சீடராகிய, வன்னிவேலமாநகர்

**திரு. வே. கிருஷ்ணசாமி அவர்களால்**

தொகுக்கப்பெற்று

மதுரை, ஸ்ரீ மீனாம்பிகை பிரஸில்

பதிப்பிக்கப்பெற்றது.

பதிப்புரிமை.]  1958.  [விலை ரூ. 0-12-0

ஓம்.




ஸ்ரீ பாலசுப்ரமணியர்.

ஓம் தத் சத்.

பரப்பிரஹ்மணே நம:



ஸ்ரீலஸ்ரீ சண்முகானந்த ஞான தேசிக சுவாமிகள்.

ஓம் தத் சத்.

பரப்பிரஹ்மணே நம:



ஸ்ரீமத் சாது - நித்தியானந்த அம்மையார்.

ஓம் தத் சத்.

பரப்ரஹ்மணே நம:

# முகவுரை.

இந்நூல் சாது-ஸ்ரீமத் நித்தியானந்தம்மாள் அவர்கள் இயற்றிய "வேதாந்த சாஸ்திரப் பலதிரட்டுப் பாடல்" ஆகும். இதற்கு முன் இயற்றிய "வேதாந்த சாஸ்திர சங்கிரகம்" என்னும் நூலைக்கற்று அதன்மூலம்வேதாந்த அபரோக்ஷஞானத்தை அடைந்துள்ள வேதாந்திகள் அனைவரும் இந்த அபரோக்ஷானுபவப் பாடல்களை அவசியம் கற்றுச் சிந்தித்தனுபவித்து மெய்ஞ்ஞானனு பூதியைப் பெறவேண்டும். இந் நூலின்கண் மிகச் சிறந்த பழம் பாடல்களுடன் அம்மையவர்கள் சுவானு பூதிப் பாடல்களும் பொன்னிற் பதித்த நவரத்தினங் களைப் போல்,ஜ்வலித்து அழகுபடுத்துகின்றன. பாடல் கள் யாவும் எளிய நடையிலுள்ளன. கல்லார்க்கும் கற்ற வர்க்கும் களிப்பைத் தருவன. சிறு குழந்தைகளும் எளிதில் பாடம் பண்ணிப் பாடத்தக்கன. இவ்வறிய நூலை அடியேன் முழுவதும் படித்தேன். வேதாந்த

சாரத்துடன் பதினெண் சித்தர்களின் ஞானசாரமாக வும் திகழ்கின்றது. இச் சிறப்புடைய நூலுக்கு "முகவுரை" வரையும் வாய்ப்பினை அடியேனுக்களித்த அம்மையார் அவர்கள் பொன்னார் திருவடிகட்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுவதுடன் மெய்ஞ் ஞான அன்பர்களனைவரும் இத்தலைசிறந்த நூலைக் கற்றுணர்ந்து பேரின்பசித்திப் பெருவாழ்வடைதல் வேண்டுமென எல்லாம் வல்ல அருட்பெருஞ் ஜோதித் தனிப்பெருங் கடவுளை இறைஞ்சுகின்றேன்.

இங்ஙனம்,

திருவருட் பிரகாச வள்ளலார் அடிமை,

க. ரா. இராதாகிருஷ்ணன்,

எம். ஏ., பி. ஓ. எல்.,

தலைமைத் தமிழாசிரியன்,

ஸ்ரீ தண்டாயுதபாணி உயர்நிலைப்பள்ளி,

கண்டரமாணிக்கம்.



# பொருளடக்கம்.


| நிர். | பொருள் | பக்கம் |
|---|---|---|
| 1. | சிறப்புப் பாயிரம் | 1 |
| 2. | ஸ்ரீரமண மகாரிஷி வாக்கியம் | 7 |
| 3. | ரிபு கீதை | 9 |
| 4. | அத்துவித உண்மை | 24 |
| 5. | ஆத்மாநு சந்தானக்கிரம தசகம் | 25 |
| 6. | சாது நித்தியானந்தம்மாள் புலம்பல் | 27 |
| 7. | குருஸ்துதி புலம்பல் | 30 |
| 8. | குருமூர்த்தி | 31 |
| 9. | குருபரக்கண்ணி | 33 |
| 10. | குருவாக்கியம் | 38 |
| 11. | ஸ்ரீலஸ்ரீ சாது சண்முகானந்தசாமி சற்குருஸ்துதி | 40 |
| 12. | நித்தியானந்தக் கீரைக் கும்மி | 44 |
| 13. | ஆச்சே போச்சே | 46 |
| 14. | தங்கமே தங்கம் | 48 |
| 15. | நூல் | 50 |
| 16. | ஊர் | 51 |
| 17. | மயில்கண்ணி | 52 |
| 18. | பாம்பாட்டி ஆனந்தக் களிப்பு | 61 |
| 19. | பலதிரட்டு ஸ்தோத்திரம் | 69 |
| 20. | வாழ்த்து. | 82 |

ஓம் தத் சத்.

பரப்பிரஹ்மணே நம:

# முன்னுரை.



ஸ்ரீ ஜகத்குரு சங்கரபகவத் பாதாசாரியார் சுவாமி அவர்களுடைய திருவடிகளுக்கு வணக்கம்.

மக்கள் உள்ளத்திற் பதிந்து அறிவினை விளக்கும் ஆற்றல் வாய்ந்த இந்நூலில் ரமண மகாரிஷி வாக்கியம், ரிபுகீதை, அத்வைத உண்மை, ஆத்மானு சந்தான கிரம தசகம் முதலிய சுவானுபூதியடையும் பாடல்களும், நித்யானந்தம்மாள் புலம்பல், குருபரக்கண்ணி, மயில்கண்ணி, பாம்பாட்டி, ஆனந்தக்களிப்பு, பல திரட்டு ஸ்தோத்திரம் முதலிய பக்திரசம் ததும்பும் பல பாடல்களும் எழுதப்பட்டிருக்கின்றன. இவ்வருமையான இந்நூலைத் தமிழ் மக்கள் யாவரும் கற்று உணர்ந்து பிரமான்ம ஐக்ய ஞானமுற்று துக்க நிவர்த்தி பரமானந்தப் பிராப்தி வடிவ மோக்ஷம் அடைவார்களாக.

இந்நூலைச் சரிபார்த்து விநாயகர் காப்பு, முகவுரை சாற்றுக்கவிகள் கொடுத்து உதவியதற்கு திருவருட்பிரகாச வள்ளலார் அடிமை உயர்திரு. இராதாகிருஷ்ணன், எம். ஏ., பி. ஓ. எல். அவர்களுக்கும், இந்நூலை வெளியிடுவதற்கு பண உதவியளித்த பாப்புநாயக்கன்பட்டி திரு. இராமானுஜ நாயக்கர் அவர்களின் பாரியார் திருமதி அழகம்மாள் அவர்களுக்கும் எமது உளமார்ந்த நன்றி. இதில் சிற்சில குறைகள் காணப்படின் அறிஞர்கள் அவற்றைத் திருத்தியமைத்துக் கொள்ளுமாறு மிகக் கேட்டுக்கொள்ளுகிறோம்.

சற்குருநாதன் துணை.

இங்ஙனம்,

**சாது நித்தியானந்தம்மாள்,**

**சுத்த சமரஸ சன்மார்க்க சங்கம்,**

**பே. சுப்புலாபுரம்.**

---

புஸ்தகம் கிடைக்குமிடங்கள்:—

(1) சாது - நித்தியானந்தம்மாள்,

**P. சுப்புலாபுரம்,**

வன்னிவேலம்பட்டி **P. O.**

**(Via) திருமங்கலம்,**

மதுரை ஜில்லா.



(2) ஸ்ரீமதி

சி. உண்ணாமலைத்தாயம்மாள்,

தலைவர்,

சச்சிதானந்த ஸபை,

தூத்துக்குடி. (S. Ry.)



ஓம் தத் சத்.

# சிறப்புப் பாயிரம்.

## சாற்றுக் கவிகள்.

முத்துசெறி பாண்டிவள நாட்டதன்கண் மேவ
முத்திநிலை சித்திதரு முத்தமிழின் வாசம்
எத்திசையும் வீசுபுகழ் மதுரையம் பதியின்
எல்லையுரை தென்மேற்கி லெழிறேவன் குறிச்சிக்
கொத்தருகிற் றிருவக்னீஸ்வர ராலயத்திற் கொருபா
லுத்தரமாம் பே(ர்) சுப்புலா புரத்தினிலோங் குதய
பக்தியொடு தானதரு மம்புரியு மரபிற்
ப. ச. இராமலிங்கரேட்டி யார்வசித்து வருங்கால்

வள்ளுவர்வாய் மொழிக்கிணங்கு வாழ்க்கைநற் றுணைக்கா
மாண்பெலாங்கொள் திருவனைய "ஆவுடையம்மை" யாம்
உள்ளமுறை செயலொத்த மங்கைதனை யுவப்போ
டுரிமையின் மணந்தொழுகு நாளிலொரு மூவர்
ஒள்ளியநன் மக்களுதித் தனரவருள் முளரி
யுறைசெல்வி நிகரழகு திகழ்புதல்வி யோதும்
அள்ளறிவு சாலிலக்ஷிமிப் பெயர்வாய்ந்து வளர்நாள்
ஆயிரக்தாட் சிவைகாசி யிருபானேழ் திகதி.

திதிசப்தமி வளர்மதியிற் றிகழ்சோம வாரத்
திருநாளிற் றனையறியும் பக்குவஞ்சார்ந் தழகாய்த்
துதிபெறுநற் குணசீலத் தோன்றலைத் தமது
துணைவனுப் பெற்றில்லறமுஞ் சிறிதனுப வித்துப்
பதியான பரமேது பகர்ஜீவ னேது
பழுதையிற் பாம்பான பாசமுந் தானேது
விதிமதியுந் தானேது வினையேது பிறப்பு
விளைவகையே தென்றுணர வேட்கைபிறந் திடவே.

வேதாந்த சாத்திரங்கள் கேட்டுணர்ந்த பின்னர்
மெய்ஞ்ஞான வுபதேசம் பெறவேண்டிப் பாரிற்
பேதாபே தங்கடந்த குருபரனைத் தேடிப்
பெருந்தவத்தாற் கோவிலூர்ப் பரம்பரைசேர் வள்ளல்
பாதார விந்தமேவு வார்பாச மகற்றிப்
பரபிரம்ம நிலைதேற்றும் பரங்கருணை வடிவாம்
தாதான்மிய சுப்ரமண்ய ஞானதேசி கன்றருள்
தலைக்கணி சண்முகானந்த தேசிகஸ்வா மிகள்பால்.

பாலொடுதேன் கலந்தபழ ரசமன்ன மொழியாற்
பரவியெனைப் பிறவாத வீடளித்துக் காக்க
வேலொளித்து வந்தமுரு கையனேயெனக் கேட்டு
வெந்தழலின் மெழுகென்ன மனமிளகி மகளே

தோலொடென்பா முடலலீநீ தோன்றியழி யாத
தொம்பதந்தற் பதலக்ஷ்யத் தொல்பிரம்ம மேதான்
சேலொத்த விழியாய்நீ நித்யானந்த மாவை
செப்புமிந்த நிலேயென்று மறவாமல் நில்லே.

எனமொழிந்த மொழிதேறி யிந்தநிலே பெணைப்போல்
எவருமடைந் திடல்வேண்டு மென்றுநினைந் தருளால்
மனமொழிக்கெட் டாதவேதாந்த சாத்திரத் தெளிவாம்
மகிமைசேர் சங்கிரக நூல்செய்து பின்னும்
தனையுணர்ந்த வேதாந்த சாஸ்த்ரபல திரட்டுச்
சர்க்கரைதேன் கலந்தருசிப் பாடல்கள்ச் சேற்றி
அனைவருக்கும் வீடளித்தாள் குருபாதம் அகலா
அம்மையாம் ஸாதுநித்யா னந்தவடி களாரே.

---

ஸ்ரீ க. ரா. இராதாகிருஷ்ணன்,
எம். ஏ., பி. ஓ. எல்.

# வன்னிவேலம்பட்டி - சுப்புலாபுரத்தில்
# திருக்கோவில்கொண் டெழுந்தருளிய
# ஸ்ரீலஸ்ரீ சாது சண்முகானந்த ஞானதேசிக ஸ்வாமிகள்
# ஸ்தோத்திரம்.

---

பண்ணிய தவமோ முன்செய்
பாக்கிய மெதுவோ காணேன்
எண்ணரும் பிறவி நீத்து
இன்பவீ டளித்துக் காத்து
மண்ணுல கதனில் பிர்மவடி
வமதாக் கியாண்ட
சண்முகானந்த நாத
சற்குரு பாதம் போற்றி.

அலைகடலிற் றுரும்பதுபோல் பிறந்திறந்தும்
அனேகநெடு நாளாக அவஸ்தை
நிலைமையினை யறிந்து குருபரனாயீசன்
நீநிலத்தில் சிவனடியாராகவந் தென்
மலமாயை இருளகல உபதேசித்து
மாக்ஷீமைசேர் பிரமவடிவாக்கி யென்று
சலனமற வருள்செய்துகாத்த ஞானச்
சண்முகானந்தர் திருச்சரணம்போ.

சுப்புலாபுரம் வன்னிவேலம்பட்டி
சூழவுயர்வான்பல கிராமத்தாரும்
செப்பறிய தவம்பலநாள் செய்தபுண்ய
சேர்க்கையினுல் சிவபெருமான் கருணைகூர்ந்
திப்புவியில் சண்முகானந்த ஞான
இறையவனுய்த் தோன்றியு மீடேற்றி
ஒப்புவமையற்ற திருப்பாதந் தன்னை
யுள்ளமதி லனுதினமும் நினைந்துவாழ்வாம்.

ஸ்ரீ சிவசுப்பிரமணிய சுவாமிகள்,
திருப்பரங்குன்றம்.



ஓம் தத் சத்.

பரப்பிரஹ்மணே நம.

# வேதாந்த சாஸ்திரப் பலதிரட்டுப் பாடல்.

## காப்பு.

வேதாந்த வனுபவத்தின் பாடற் றிரட்டை
விருப்பமுடன் தொகுத்தெழுத வேண்டி யானும்
போதாந்தப் பொருளதனைப் புருவ மத்தி
பொருந்துகின்ற ஜோதியதைப் போற்றி மேலும்
வாதாந்த மோனமணித் தாயின் பாதம்
வளமான சிவோகமென வமர்ந்தே னதனால்
நாதாந்தப் பிரணவத்தின் நந்தி பாதம்
நானதுவாங் கணபதியுங் காப்புத் தானே.

ஓத் தத் சத்.
பரப்பிரஹ்மணே நம:

# ஸ்ரீ ரமண மகரிஷி வாக்கியம்.

அப்பளமிட்டுப்பாரு அத்தைச்
சாப்பிட்டுன்னாசையைத் தீரு
இப்புவிதன்னிலே ஏங்கித் திரியாமற்
றற்போதசுக சற்குருவானவர்
செப்பாது சொன்ன தத்துவமாகின்ற
ஒப்புயர்வில்லா ஓர்மொழியின்படி
அப்பளமிட்டுப்பாரு அத்தைச்
சாப்பிட்டுன்னாசையைத் தீரு. (1)

தானல்லா ஐங்கோச க்ஷேத்திரந்தனில்
தானென்னு மானமாம் தானிய உழுந்தை
நானாரென்ற ஞானவிசாரத் திரிகையில்
நானல்ல வென்றே யுடைத்துப்பொடித்து
அப்பளமிட்டுப்பாரு அத்தைச்
சாப்பிட்டுன்னாசையைத் தீரு. (2)

சற்சங்கமாகும் பிரண்டை ரசத்தோடு
சமதமமாகின்ற சீரகமிளகுடன்

உபரதியாகும் உப்போடுள்ள
நல்வாசனையாம் பெருங்காயமும் சேர்த்து
அப்பளமிட்டுப்பாரு அத்தைச்
சாப்பிட்டுண்ணுசையைத் தீரு. (3)

கல்நெஞ்சன் ஞானெனக்கலங்காமல்
உள்முக உலக்கையால் ஓயாதுஇடித்து
சாந்தமாம் குழவியாற் சமமான பலகையிற்
சந்ததம் சலிப்பறச் சந்தோஷமாகவே
அப்பளமிட்டுப்பாரு அத்தைச்
சாப்பிட்டுண்ணுசையைத் தீரு. (4)

மோன முத்திரையாகும்
முடிவில்லாப் பாத்திரத்தில்
ஞானக் கினியாற் காயும்
நற்பிரம்ம நெய்தனில்
நானதுவாகவே நாளும்பொரித்துத்
தானே தானகப் புசிக்கத் தன்மயமாய்
அப்பளமிட்டுப்பாரு அத்தைச்
சாப்பிட்டுண்ணுசையைத் தீரு. (5)



ஓம் தத் சத்.

# ரிபு கீதை.



## எண்சீர்க் கழிநெடில் ஆசிரிய விருத்தம்.

அகிலசக நாயகனு யனந்த சக்தி
அமைவுற்ற வகண்டசிவன் சரணம் போற்றி
நிகிலசக மாதாவாய் நித்யா னந்த
நிசவடிவா மம்பிகையின் சரணம் போற்றி
சகலவித விக்கினமும் தீர்த்தெல் லோர்க்கும்
சாதகமாம் விநாயகனற் சரணம் போற்றி
தகைமிகு மன்பர்க்குச் சிவஞா னத்தைத்
தந்தருளும் சண்முகனற் சரணம் போற்றி. (1)

பெருமைமிகு மிருக்குமறை முடிவி லுள்ள
பிரஞ்ஞானம் பிரமமெனும் வாக்ய மொன்று
மிருண்மருவா யசுர்வேத முடிவி லுள்ள
விலகுமகம் பிரமாஸ்மி வாக்ய மொன்று
மருண்மருவாச் சாமமறை முடிவி லுள்ள
மகத்தான தத்வமசி வாக்ய மொன்று
மரியவதர் வணவேத முடிவி லுள்ள
வயமான்மா பிரமமெனும் வாக்ய மொன்றும். (2)

தேகமுத ஞனென்னல் துவித விருத்தி
திகழ்சாட்சி நானென்னல் சாட்சி விருத்தி
யேகபரம் நானென்னல் அகண்ட விருத்தி
இம்மூன்று விருத்திகளில் இரண்டைத் தள்ளி
யாரும்அகண் டாகார விருத்தி தன்னை
யன்வரதம் ஆதரவா யப்யா சித்துச்
சோகமுறுஞ் சித்தவிகற் பங்கள் தீர்த்துச்
சொன்னவகண் டேகரச சொரூப மாவாய். (3)

தற்பதலட் சியமான பிரம ரூபம்
துவம்பதலட் சியமான நீயே யாவாய்
யற்பமுமே இதிலைய மைவ தில்லை
யகண்டசிவன் றன்னுணே யறைந்த துண்மை
சொற்பமிலா அகண்டபரி பூர்ண மான
சுத்தமதாம் பரப்பிரம நீயே யென்று
செப்பியிடுங் குருபரனே குருவா கின்றேன்
செப்பியவா றறிந்தவனே சீட ஞனேன். (4)

உச்சமதாங் குருவருளு மகண்டார்த் தத்தை
யுவகையுட னுள்ளபடி கேட்ட பின்னர்
நிச்சலமாம் புத்தியினல் நிச்ச யித்து
நிருமலமா யகம்பிரம மானே னென்றே

துச்சமிலா வநுபூதி யடைந்த வன்றன்
றுகளற்ற நற்சீடன் மற்றோ ரெல்லாம்
எச்செயலைச் செய்யினுமே சீட ராகா
ரேகபர மறிந்தவனே சீட னவன். (5)

சுயமதுவாம் தத்வமசி யென்னும் வாக்கியம்
சொல்லுமுப தேசமகா வாக்ய மாகு
மியலுமகம் பிரமாஸ்மி யென்னும் வாக்கியம்
மிலகுமநு பூதிமகா வாக்ய மாகு
மயன்மருவாப் பிரஞ்ஞானம் பிரம வாக்யம்
மனனத்தி னப்பியாச வாக்ய மாகு
மயமான்மா பிரமமென வறையும் வாக்யம்
அதற்கெல்லாஞ் சம்மதமாம் வாக்ய மாமே. (6)

ஆதலினுல் தத்வமசி வாக்கி யத்தால்
அருளியவா றகண்டார்த்த மறிந்து கொண்டு
பேதமறப் பிரஞ்ஞானம் பிரம மென்று
பேசுமகா வாக்கதனுன் மனனஞ் செய்து
வாதகமி லயமான்மா பிரம மென்னும்
வாக்கதனுற் சரியெனவே சம்ம தித்துங்
கோதுமகம் பிரமாஸ்மி வாக்கி யத்தால்
உரைத்தவகண் டார்த்தத்தை யனுப விப்பாய். (7)

அனிசமகம் பிரமாஸ்மி வாக்கி யத்தா
லகண்டபர பாவனையே அப்பியா சித்து
நனிமருவும் பாவனையா நாம ரூப
நாட்டமெலா நன்றாக நாசஞ் செய்து
துனிமருவுந் துவிதத்தின் றொடர்பே யின்றித்
துகளற்ற அகண்டார்த்த மநுபவித்து
அனியமிலா வகண்டார்த்த வடிவே யாவாய்
அவ்வண்ண மாகுவதே யகண்ட மோட்சம். (8)

மாயையெனு முபாதியுறு ஈசன் றானே
மருவியதற் பதம்உரைசெய் வாச்சி யார்த்த
மாயதன தவித்தையுறுஞ் சீவன் றானே
யறைகின்ற துவம்பதமோர் வாச்சி யார்த்த
மேயமதா முபாதியெலா மிழந்த பின்ன
ரேகவிலக் கணமான வத்துத் தானே
தூயபத மிரண்டுக்கு மிலட்சி யார்த்தம்
தொடர்புற்ற வைக்கியமே யசிப தார்த்தம் (9)

நான்றானே நிர்குணமாம் பிரமரூப
நான்றானே நிர்மலமாம் பிரமரூப
நான்றானே நிட்களமாம் பிரமரூப
நான்றானே நிட்கிரியப் பிரமரூப

நான்றானே நிச்சலமாம் பிரமரூப
நான்றானே நிரஞ்சனமாம் பிரமரூப
நான்றானே நிறைந்தபரப் பிரமமென்றே
நழுவாது நிதித்தியாசஞ் செய்யவேண்டும். (10)

நான்றானே நிராமயமாம் பிரமரூப
நான்றானே நிராவரணப் பிரமரூப
நான்றானே நிரந்தரமாம் பிரமரூப
நான்றானே நீக்கமிலாப் பிரமரூப
நான்றானே நிர்ப்பயமாம் பிரமரூப
நான்றானே நிரதிசயப் பிரமரூப
நான்றானே நிகரில்பரப் பிரமமென்றே
நழுவாது நிதித்தியாசஞ் செய்யவேண்டும். (11)

நான்றானே நித்தியமாம் பிரமரூப
நான்றானே நிலைபெற்ற பிரமரூப
நான்றானே சத்தியமாம் பிரமரூப
நான்றானே சலனமற்ற பிரமரூப
நான்றானே யத்துவிதப் பிரமரூப
நான்றானே யயலமற்ற பிரமரூப
நான்றானே சுத்தபரப் பிரமமென்றே
நழுவாது நிதித்தியாசஞ் செய்யவேண்டும். (12)

நான்றானே நாசமிலாப் பிரமரூப
நான்றானே நவைமருவாப் பிரமரூப
நான்றானே பாசமிலாப் பிரமரூப
நான்றானே பங்கமுறாப் பிரமரூப
நான்றானே சாசுவதப் பிரமரூப
நான்றானே சங்கமிலாப் பிரமரூப
நான்றானே நேசபரப் பிரமமென்றே
நழுவாது நிதித்தியாசஞ் செய்யவேண்டும். (13)

நான்றானே யகிலமுமாம் பிரமரூப
நான்றானே யூனமிலாப் பிரமரூப
நான்றானே யிகழ்விலதாம் பிரமரூப
நான்றானே யேகபரப் பிரமரூப
நான்றானே சுககனமாம் பிரமரூப
நான்றானே சத்தபரப் பிரமரூப
நான்றானே துகளில்பரப் பிரமமென்றே
நழுவாது நித்தியாசஞ் செய்யவேண்டும். (14)

நான்றானே சன்மயமாம் பிரமரூப
நான்றானே சதானந்தப் பிரமரூப
நான்றானே சின்மயமாம் பிரமரூப
நான்றானே சிதாகாயப் பிரமரூப

நான்றானே நன்மயமாம் பிரமரூப
நான்றானே நானான பிரமரூப
நான்றானே நின்மலமாம் பிரமமென்றே
நழுவாது நிதித்தியாசஞ் செய்யவேண்டும். (15)

நான்றானே நித்தப்பரப் பிரமரூப
நான்றானே சுத்தபரப் பிரமரூப
நான்றானே புத்தபரப் பிரமரூப
நான்றானே முத்தபரப் பிரமரூப
நான்றானே திருத்தபரப் பிரமரூப
நான்றானே சித்தபரப் பிரமரூப
நான்றானே நிமலபரப் பிரமமென்றே
நழுவாது நிதித்தியாசஞ் செய்யவேண்டும். (16)

அகம் பிரம நிச்சயமே தேவபூசை
அகம் பிரம நிச்சயமே தெய்வத்யானம்
அகம் பிரம நிச்சயமே செபதபங்கள்
அகம் பிரம நிச்சயமே யறங்கள்யாவும்
அகம் பிரம நிச்சயமே யகண்ட-தியானம்
அகம் பிரம நிச்சயமே யகண்டயோகம்
அகம் பிரம நிச்சயமே யகண்டஞானம்
அகம் பிரம நிச்சயமே யகண்டமோக்ஷம். (17)

எப்போது மியம்பாமல் மௌன மாகி
யெவருடனுங் கூடாம லேகாந் தத்திற்
கற்போல அசையாம லிருந்து சற்றுங்
கலங்காத மனத்துடனே யொருமை யாகிச்
சற்போத சுககனமாம் பரநா னென்றே
சந்ததமும் பாவித்துச் சாந்த னாகித்
தற்போத சூனியனாய் விகற்பந் தீர்ந்து
தற்பதமே தானாகி முத்த னாவாய். (18)

அகண்டபரப் பிரமத்துக் கயலே யில்லை
அகிலமுமவ் வகண்டபரப் பிரம மென்றும்
அகண்டபரப் பிரமமது வகமே யென்றும்
அகமந்த வகண்டபரப் பிரம மென்றும்
அகண்டபர பாவனையே திடமாய்ச் செய்து
அயலணுவுந் தோன்றாம லழிந்த பின்னர்
அவ்வகண்டபர பாவனையும் அகலத் தள்ளி
யானந்த வடிவாக அமர்ந்து நிற்பாய். (19)

உன்னியவவ் வானந்த வடிவுந் தள்ளி
யுரமாக வொருவடிவே யாகி நிற்பா
யன்னியமி லொருவடிவென் பதையுந் தள்ளி
யதன்பின்பு நிர்க்குணமே யாகி நிற்பாய்

மன்னியவர் நிர்க்குணமென் பதையுந் தள்ளி
மனவாக்குக் கெட்டாத வடிவாய் நிற்பா
யன்னதையுந் தள்ளியபின் னறிவு மாத்ர
மாயதையு மிழந்தான்ம மாத்ர மாவாய். (20)

அன்னதையுந் தள்ளியபின் பிரம மாத்ரம்
ஆயிடுவாய் மற்றதையுந் தள்ளி யிங்குச்
சொன்னவெலா மிழந்துவெறி தாக நிற்பாய்
சொன்னதையுந் தள்ளிமிக வெறிதாய் நிற்பாய்
பின்னுளமே முதலியவோ ருபாதி யின்றிப்
பேசவொண்ணுச் சூனியமா நிலையில் நிற்பாய்
இன்னவித சூனியமு மிழந்த பின்னர்
எவ்வடிவோ வவ்வடிவே யாகி நிற்பாய். (21)

நிற்பதென்னுந் தன்மையுமே யிழந்த பின்னர்
நீ நீயா யிருக்கின்ற சுபாவந் தன்னைச்
சொற்பமுமே வாக்காலு மனத்தி னலுஞ்
சொல்லவொண்ணு தெண்ணவொண்ணு தாத லாலே
தற்பரமாஞ் சகசநிலை சார்ந்த பின்னர்த்
தான்றனே தானகத் தனித்தி ருப்பாய்
அற்பமுமே விகற்பமிலா வவ்வி ருப்பை
யறைந்திடவு நினைந்திடவு மார்தான் வல்லோர். (22)

சொல்லியவிவ் விதமாக வனைத்துந் தள்ளிச்
சுத்தபர வடிவாகிச் சுயமாய் நிற்பா
யல்லதெல்லாந் தள்ளலுமே யகண்ட மான
வகமெனவே யனவரத மநுசந் திப்பாய்
எல்லையிலா வகண்டபர நானே யென்றிங்
கெப்போதும் பழகியவிவ் வநுசந் தானங்
கல்லெனவே திடமான நிர்வி கற்பங்
கைவசமே யாகுவதிற் கார ணங்காண். (23)

ஆதலினு லனைத்துக்கு மதீத மான
வகண்டபரப் பிரமமக மென்றெப் போதுஞ்
சாதகமாம் பாவனையே செய்த தாலே
சஞ்சலமாம் விகற்பமெலாந் தவிர்த்தெப் போதும்
பேதமிலாப் பரப்பிரம ஞானி யாகிப்
பின்னமிலாப் பரப்பிரம வடிவே யாவாய்
ஈதல்லா லெளிதாக முத்தி சார
வேதொன்று முபாயமிலை யிதுவே யுண்மை. (24)

திடஞானி தெரிசனமே தீர்த்த மாடல்
திடஞானி தெரிசனமே தேவ பூஜை
திடஞானி தெரிசனமே செப தபங்கள்
திடஞானி தெரிசனமே செயும றங்கள்
திடஞானி தெரிசனமே சிவத்தைக் காணல்
திடஞானி தெரிசனமே சிவத்தின் சேவை

திடஞானி தெரிசனமே மேவு தற்குத்
திரிவிதமா முலகத்து மரிதா மியார்க்கும். (25)

வரமான ஞானிக்கு மகிழ்வி னோடே
வளமான போசனமே யளிப்ப தாலும்
திரமான ஞானிக்குத் தேவை யான
திரவியமே சிரத்தையொடு கொடுப்ப தாலும்
பரமான ஞானிக்குப் பக்தி யோடே
பலவிதமாம் பணிவிடையே செய்வ தாலும்
அரிதான மோட்சசுகம் மெளிதே யாக
அடைந்திடலா மனுவுமிதி லைய மில்லை. (26)

அகம்பிரம மெனக்கயலாய்ச் சித்து மில்லை
யகம்பிரம மெனக்கயலாய்ச் சடமு மில்லை
யகம்பிரம மெனக்கயலாச் சத்து மில்லை
யகம்பிரம மெனக்கயலாய் மித்தை யில்லை
யகம்பிரம மெனக்கயலா யிருமை யில்லை
யகம்பிரமம் மெனக்கயலா வொருமை யில்லை
யகம்பிரம பிரமமக மகமெல் லாமென்
றயலறவே யனவரத மறிவாய் மைந்தா. (27)

அகம்பிரம மெனக்கயலாய் மாயை யில்லை
யகம்பிரம மெனக்கயலாய் யீச னில்லை
யகம்பிரம மெனக்கயலா யவித்தை யில்லை
யகம்பிரம மெனக்கயலாய்ச் சீவ னில்லை

யகம்பிரம மெனக்கயல்ர்யச் சகத்து மில்லை
யகம்பிரம மெனக்கயலா யொன்று மில்லை
யகம்பிரமம் பிரமமக மகமெல் லாமென்
றயலறவே யநவரத மறிவாய் மைந்தா. (28)

அகம்பிரம மெனக்கயலாய்ப் பூத மில்லை
யகம்பிரம மெனக்கயலாய்ப் புவன மில்லை
யகம்பிரம மெனக்கலாய் நரரு மில்லை
யகம்பிரம மெனக்கயலாய்ச் சுரரு மில்லை
யகம்பிரம மெனக்கயலாய் திரியக் கில்லை
யகம்பிரம மெனக்கயலாய் யெவையு மில்லை
யகம்பிரமம் பிரம்மக மக்மெல் லாமென்
அயல்றவே யநவரத மறிவாய் மைந்தா. (29)

அகம்பிரம மெனக்கயலாய்ப் பாவ மில்லை
யகம்பிரம மெனக்கயலா யறமு மில்லை
யகம்பிரம மெனக்கயலாய்த் துக்க மில்லை
யகம்பிரம மெனக்கயலாய்ச் சுகமு மில்லை
யகம்பிரம மெனக்கயலா யிக்மு மில்லை
யகம்பிரம மெனக்கயலாய்ப் பரமு மில்லை
யகம்பிரமம் பிரமமக மகமெல் லாமென்
றயலறவே யநவரத மறிவாய் மைந்தா. (30)

அகம்பிரம மெனக்கயலாய்த் தந்தை யில்லை
யகம்பிரம மெனக்கயலாய்த் தாயு மில்லை

யகம்பிரம மெனக்கயலாய்த் தமரு மில்லை
யகம்பிரம மெனக்கயலாய்ப் பிறரு மில்லை
யகம்பிரம மெனக்கயலாய்க் குருவு மில்லை
யகம்பிரம மெனக்கயலாய் யெவரு மில்லை
யகம்பிரமம் பிரமமக மகமெல் லாமென்
றயலறவே யநவரத மறிவாய் மைந்தா. (31)

அகம்பிரம மெனக்கயலாய்த் தீர்த்த மில்லை
யகம்பிரம மெனக்கயலாய்த் தானமில்லை
யகம்பிரம மெனக்கயலாய்த் தெய்வ மில்லை
யகம்பிரம மெனக்கயலாய்ப் பூசை யில்லை
யகம்பிரம மெனக்கயலாய்ச் செயலு மில்லை
யகம்பிரம மெனக்கயலாய்ப் பயனு மில்லை
யகம்பிரமம் பிரமமக மகமெல் லாமென்
றயலறவே யநவரத மறிவாய் மைந்தா. (32)

அகம்பிரம மெனக்கயலாய்த் தேக மில்லை
யகம்பிரம மெனக்கயலாய்ப் போக மில்லை
யகம்பிரம மெனக்கயலா யோக மில்லை
யகம்பிரம மெனக்கயலாய் ஞான மில்லை
யகம்பிரம மெனக்கயலாய் மோட்ச மில்லை
யகம்பிரம மெனக்கயலோ ரணுவுமில்லை
யகம்பிரமம் பிரமமக மகாமெல்லா மென்
றயலறவே யநவரத மறிவாய் மைந்தா. (33)

பக்தருடைப் பவதாப மனைத்தும் நீக்கிப்
பரமசுகம் நலகியநின் சரணம் போற்றி
சுத்தபர ஞானத்தை யெளிதாய்த் தந்து
சோர்வையெலா நீக்கியநின் சரணம் போற்றி
சித்தமுதற் கப்பாலாய்ச் செறிந்து நின்ற
சிதாகாய வடிவேநின் சரணம் போற்றி
வித்தரமாம் வேதாந்தப் பொருளை யெல்லாம்
விலக்கியசற் குருவேநின் சரணம் போற்றி. (34)

விமலதாய் வேறற்ற வகண்டா கார
விருத்தியினில் விளங்கியசற் குருவே போற்றி
அமலமதா யகண்டபர வித்தை யாகி
அவித்தையெலா நீங்கியசற் குருவே போற்றி
நிமலமதாம் வித்தைக்கும் அப்பா லாகி
நிச்சலமாய் நின்றபர குருவே போற்றி
சமமதுவாய்ச் சற்றுமொரு சங்க மின்றிச்
சன்மாத்திர மரணபர குருவே போற்றி. (35)

சத்தியசிற் சுககனமாங் குருவே போற்றி
சலனமிலாச் சாந்தபர குருவே போற்றி
நித்தியநிர்க் குணமான குருவே போற்றி
நிரஞ்சனமாய் நின்றபர குருவே போற்றி

சுத்தபர வெளியான குருவே போற்றி
சூட்சுமமாய் நிறைந்தபர குருவே போற்றி
அத்துவித பூரணமாங் குருவே போற்றி
யகண்டமதாங் சற்குருவே போற்றி போற்றி. (36)

அங்கமுத லணுவுமிலா தகண்டா கார
மாகியுள வத்துவித பரசி வத்தைச்
சங்கமறச் சந்ததமும் சிவோக மென்னுஞ்
சலியாத பாவனையாற் பூசை செய்து
துங்கபர சிவகருணை திடமாய்ப் பெற்று
தொடருமஞ்ஞ விகற்பமெலா முடனே தீர்ந்து
பங்கமிலாப் பரமசிவ போதங் கூர்ந்து
பரமசிவ பக்தனுநா ஞானே னையா. (37)

அருள்வடிவா யெனையாண்ட சிவமே போற்றி
யானந்த கனமான சிவமே போற்றி
சருவவிலட் சணமான சிவமே போற்றி
சகலர்க்கு மிதமான சிவமே போற்றி
நிருமலமாய் நின்றபர சிவமே போற்றி
நீக்கமற நிறைந்தபர சிவமே போற்றி
யிருமையிலா ஏகபர சிவமே போற்றி
யெங்குமுள அகண்டபர சிவமே போற்றி. (38)

# அத்துவித உண்மை.

எல்லாம் நாமே யென அறிந்தால்
எந்தை நினைவால் நினைந்திடுதல்
சொல்லாலெதனை உரைத்திடுதல்
தொழிலாலெதனைச் செய்திடுதல்
நில்லா உலகை வேறெனவே
நினைத்தல், உரைத்தல், தொழில்புரிதல்
நல்லாரனைத்தும் நாமெனவே
நாடாரவையு மொன்றையுமே. (1)

தானுண்டாகில் உலகுண்டாம்
தானுண்டாகில் உயிருண்டாம்
தானுண்டாகில் பரனுண்டாம்
தானுண்டாகில் வீடுண்டாம்
தானுண்டாகில் ஐந்துதொழில்
தானுண்டாகும் தன்னையன்றித் தானுண்டோ
மற்றவை அனைத்தும்
தானேயன்றி வேறில்லை. (2)

தானாய்ப் பார்த்திடுமிடத்திற் சகலமும் தானாய்த் தோன்றும்
தானாய்ப் பாராவிடத்திற் சகலமும் வேறாய்த் தோன்றும். (3)
தன்னினைவி னாலே ஜகமாய் விரிந்ததெனத்
தன்னினைவை நீங்கித் தானாயிருந்தனமே. (4)
உண்டாய் ஒடுங்குவது உண்டான தன்னிடத்தே
உண்டாகுமென்றே யொடுங்கி யிருந்தனமே. (5)

---

ஓம் தத் சத்.

பரப்பிரஹ்மணே நம.

# ஆத்மாநு சந்தானக் கிரமதசகம்

ஓதுமண்ணிலை யுதகமிங்கிலை யொளிருந் [illegible] யனிலை
பூதவிண்ணிலை யிந்திரியமிலை புகன்ற [illegible] திரளிலை
யேதுமேவிய சாரமேவி யிற்பதா [illegible] ன்
மீதியாயுள பூரணனந்த மேனியா [illegible]. (1)



சாதியுமிலை யாஸ்ரமமி [illegible] தருமமிலை
நீதியுமிலை தாரணையிலை நிதித்தியாசன யோகமே
யாதியுமிலை கற்பனையப வாதவாஸ்ரய மாதலாற்
சோதியாய்நிலை நின்றபூர்ண சுத்தரூப சிவோகமே. (2)

தந்தை தாயிலை தேவருமிலை தங்கு லோகங்களுமிலை
சந்தவேதங்களிலை யாகங்கள் சகல தீர்த்தங்களுமிலை
தொந்தமற்ற சுழுத்தியிற் றொடராது நீங்குதலான் மகா
னந்த பூரண சத்திய கேவலஞானநித்த சிவோகமே. (3)

பன்னுசாங்கிய சைவமுமிலை பாஞ்சராத்திரமுமிலை
யுன்னு சைன மீமாஞ்சையுமிலை யுலகுண்மற்றமதமிலை
துன்னு ஞானிகளனுபவப் பிரசித்ததூய சொரூபமாய்ப்
பின்னமேயற நின்ற பூரண பிரமமென்ற சிவோகமே. (4)

பகருமேலில்லை கீழில்லைப் பரவுள்ளில்லைப் புறமுமில்லை
யகலமேனடுவில் குறுக்கில்லையா கிழக்கில்லை மேற்கில்லை
ககனமென்ன நிறைந்த கண்டசிற்கன கேவலரூபமாய்ச்
சுககனச் சுகதாதிபேத விகின சுத்த சிவோகமே. (5)

வெள்ளையுமில்லை கருமையுமில்லை வேறுபீத சிவப்பில்லை
குள்ளமுமில்லை நெடியதுமில்லை குறை பெருத்தலுமில்லையே
தள்ளியித்தனைரூபமுமந்த விராதசோதி சொரூபமா
யுள்ள பூரண ஞானவின்ப வுபாதிகின சிவோகமே. (6)

சாத்திரந்தனை போதிப்பானில்லை சாத்திரம் படிப்பானில்லை
சாத்திரமில்லை பாடமுமில்லை சாற்று நீயில்லை நானில்லை
சாத்தியாதி சகத்தில்லைச் சலமற்று மிஞ்சதலான் மகா
சாத்திரப் பொருளான பூரண சாந்தபோத சிவோகமே. (7)

சாக்கிரமில்லை சொப்பனமில்லை சார்சுழுத்தியில்லை யிதிற்
ரூக்குவிசுவனிற் றைசதனில்லை தங்குபிராஞ்ஞனு மில்லைமூன்
ரூக்கையுமில்லை யவையவித்தை விகாரமாதலின் விவை
நீக்கி நின்றிடு துரியபூரண நித்தபோத சிவோகமே.(8)

அதிவியாபக மாதலாலழிவற்ற தத்துவமென்றதாற்
சுதசிதப் பொருளானதாற் றனில்வேறொன்றைத் தொடரா
[ததாற்
சததமாயுள சிவமொழிந்திவண் சகமெனும் பொருளேயில்லை
யதுவிதென் றுரை செய்வதற் கரிதாமகண்ட சிவோகமே. (9)

இல்லையேகமெனுஞ் சொலுமிரண்டென்றுசொல்லுவதெங்ங
யில்லைகேவல மோடகேவலமில்லை சூனியா சூனிய [னே
மெல்லையற்ற வகண்டசிற்சுக வேகபூரண வத்துவாற்
றெல்லைவேதமுடிப் பொருடனைத் தோன்றுவெப்படி
யோதுவாம். (10)



உ

ஓம் தத் சத்.
பரப்பிரஹ்மணே நம:

# சாது நித்தியானந்தம்மாள் புலம்பல்.

பாசிதனைக்கழுவலுற்றால் ஜோதிதோன்றும் [தோன்றும்
(என்னப்பன்) பரம்பொருளே யென்றுசொன்னால் பளிங்கு
ஜோதிதனை யுற்றுப்பார்த்தால் வெளிச்சம் தோன்றும்
சொன்னபடி மனமிருந்தால் சுயமாய்த் தோன்றும்
அருள்பெருக அருள்பெருக அங்கே தோன்றும்
அப்பப்பா நின்மகிமை அருமை தானே. (1)

ஆசை மூன்றையும் நாசமதாக்கி
ஆணவம் காமியம் மெல்லவே போக்கி
உள்ளூறத் திருஷ்யை மெல்லவே நோக்கி
பார்க்கப் பார்க்கத் தெரியும் பரமானந்தம். (2)

கரும உபாசனையால் இருமலத்தைச் சுத்தி செய்துச்
சற்சங்கபூசை சாற்றத் துணிந்தேனே.

சாதன சாதுட்டயமடைந்துச் சற்குருவைப்போற்றிச்
சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தேன்.

பஞ்சாட்சரம்பகர்ந்து பக்தியென்னும் நீர்பாய்ச்சி
நெஞ்சகத்தைப் பண்படுத்தநான்பட்ட நிட்டூரம் நிரம்பவல்
[லோ. (3)

அகண்டாட்சரந்தொழுது அநேகதவமுடித்து
வஞ்சமனமறுக்கநான்பட்ட வன்கொடுமைமெத்தவல்லோ.()

தூலக்குகைக்குள்ளே துலங்கும் சிவலிங்கம்
தொண்டுபண்ணிக்கண்டேன் என்து துக்கந்தொலைந்ததே.()

வினையின் புதைக்குள்ளே விளைந்த சிவலிங்கம்
விசாரித்துப் பார்த்தேன் விமலமிருந்ததே (6)

அருகம்புதைக்குள்ளே அமர்ந்த சிவலிங்கம்
ஆராய்ந்துபார்த்தேன் ஆனந்தமாச்சுதே. (7)

இருதயகுகைக்குள்ளே இருந்த சிவலிங்கம்
யத்தம்பண்ணிப்பார்த்தேன் என்பாவந் தொலைந்ததே.()

சித்தக் குகைக்குள்ளே சிறந்த சிவலிங்கம்
சிந்தித்துப் பார்த்தேன் என்சித்தம் தெளிந்ததே. (9)

படித்தறிந்தபோதே பரோட்ச ஞானம்பெற்றேன்
அப்பியாச மிகுதியினால் அபரோட்ச ஞானம்பெற்றேன்.(10)

சொரூபக்குழிதோண்டிச் சித்தம் என்னும் கம்பம்நாட்டி
சிரவணச்சல்லிபோட்டு மனனத்தால் கெட்டிசெய்தேன். ()

சமாதியாகிய திருப்தியடைந்து ஆருடமாகிய ஆனந்த
[மடைந்தேன்

என்ன புண்ணியமே செய்தேன் ஏதுபாக்கியமோ காணேன்.

கண்டு மகிழ்ந்தேனே காணாத காட்சியெல்லாம்
பார்த்து மகிழ்ந்தேனே பாராத பரஞ்சோதி. (13)

சோதி மயந்தானே சொரூப நிலையாச்சு
சொரூப நிலைதானுய்ச் சுகித்துமிருந்தேனே (14)

சுகித்து மிருந்தேனே சூட்சும சொரூபமாகச்
சர்வமும் தன்மயமாகித் தானுயிருந்தேனே. (15)

இல்லறத்தாசை எள்ளளவும் தோன்றவில்லை
துறவறத்தின்பம் பூண்டேன் பரசிவமே. (16)

உள்ளம் உணர்ந்து உற்றறிந்து நோக்கினோர்க்கு
எங்கும் பரவெளியாயிருக்கும் பரசிவமே. (17)

இனித்துயர்படமாட்டேன் விட்டேனே என்குருமேல் ஆணை
[யிட்டேனே

இனிப்பாடுபடமாட்டேன் விட்டேனே என்னப்பன்மேல்
[ஆணையிட்டேனே. (18)

# குருஸ்துதி புலம்பல்.

ஓயாத என்மனதை யோடாமலே தடுத்து
நீயாரென வினவி நிற்கவைத்த சற்குருவே. (1)

அஞ்ஞானக்காட்டை அடியோடு சுட்டெரித்து
மெஞ்ஞான வேளாண்மை மேவவைத்த சற்குருவே. ()

அப்பா அருள்மலையே ஆன்மநிலை யின்னதெனச்
செப்பத் திறமளித்த தேசிகனுஞ் சற்குருவே. (3)

சந்தேக மெனுமலையைச் சல்லிசல்லியாகச் செய்து
சந்ததமுந் தன்னிலையில் சாரவைத்த சற்குருவே. (4)

குருசீட பாவனையைக் கொளுத்தி நீறாய்ச்செய்து
திருப்திமயமாய்ச் செய்த தேசிகனே சற்குருவே. (5)

எங்கெங்கே பார்த்தாலும் எவ்வடிவுந்தன் வடிவாய்த்
தங்கும்படிசெய்த தற்பரனே சற்குருவே. (6)

நீக்கமறவெங்கும் நிறைந்தபரம் நீயெனவே
ஊக்கமுறக்காட்டும் உணர்வொளியே சற்குருவே. (7)

அடங்கா மகிழ்ச்சிதந்த ஆண்டவர்க்குக் கைமாறு
இடங்காண இவ்வுலகில் என்னறிவே சற்குருவே. (8)

பிறவிக்கலி நீக்கிவைத்த பெருமலையாம் மாணிக்கம்
மறப்பதற்கு நீதியுண்டோ மகிழ்வான சற்குருவே. (9)

ஓம் தத் சத்.

பரப்பிரஹ்மணே நம:

# குருமூர்த்தி.



பொய்யான உடல்தன்னில் மெய்யாக
வசித்திடும் புண்ணியனே குருமூர்த்தி
மெய்யென்ற உடலையே பொய்யென்று
பார்த்திடும் பொற்பாதனே குருமூர்த்தி. (1)

பாசபந்தங்களை வேரறபறித்திடும்
பாக்கியனே குருமூர்த்தி
கர்மசாகரத்தைக் கடந்து வாவென்று
சொன்ன காரணனே குருமூர்த்தி. (2)

பொய்மையாம் சரீரத்தில் புறம்பாகி
நிற்கின்ற பூரணனே குருமூர்த்தி
ஐம்பூத சாட்சியாய் அகத்தில்
வசிக்கின்ற ஆண்டவனே குருமூர்த்தி. (3)

என்னையறியாமல் ஏமாந்து அலைகின்ற
ஏழையே நான் குருமூர்த்தி
உன்னையறியென்று உண்மையைக் காட்டிய
உத்தமனே குருமூர்த்தி. (4)

சம்சாரபந்தத்தில் சாரா திருவென்ற
சற்குணனே குருமூர்த்தி
பந்தத்தில் ஆழாமல் பண்பாய்
எனையாண்ட பாக்கியனே குருமூர்த்தி. (5)

ஜென்மமெடுத்துமே திகைத்து நானலைந்தேனே
தேசிகனே குருமூர்த்தி
திகைப்பினை மாற்றியே ஸ்திரமாக
யெனையாண்ட சின்மயனே குருமூர்த்தி. (6)

பலபல ஜென்மத்தில் பட்டதுயரெல்லாம்
பார்த்திருந்தாய் குருமூர்த்தி
இந்த ஜென்மத்தில் இரங்கி வந்தாட்கொண்ட
இறைவனே குருமூர்த்தி. (7)

அகமதில் காணென்று அற்புதம்காட்டிய
அண்ணலே குருமூர்த்தி
ஐம்பூத சாக்ஷியாய் அங்கங்கே
நீபார்த்து அறிந்திருந்தாய் குருமூர்த்தி
மலரடி தந்தென்னை மகிழ்ந்து
நீயாட்கொண்ட மாதவனே குருமூர்த்தி. (8)

---

ஓம் தத் சத்.

பரப்பிரஹ்மணே நம:

# குருபரக்கன்னி.

குருபரநாதனென்று குழந்தையிலே யானுந்தேடி
பாருபாரு என்று உன்னைப்பணிந்தேன் குருபரனே. (1)

வெறுமையாய் நின்று வேதனையாக யான் வாடிதொழுது
பருவமறிந்தவுடன் பணிந்தேன் குருபரனே. (2)

கருமகாண்டமெல்லாங் களைந்துவிட வேணுமென்று
பருவமதானவுடன் பணிந்தேன் குருபரனே. (3)

அருமையாயுன்னை யனுதினமும் வாவாவென்று
தருமமாய் வாருமென்று தனித்தேன் குருபரனே. (4)

இருமென்று சொல்லி என்குருவே நீயிருந்தால்
பருவமதானேன் பரனே சிவகுருவே. (5)

அண்ணமலையை யனுதினமும் யான்தேடிக்
கண்ணை கண்ணுக்குக் கருதினேன் குருபரனே. (6)

என்னையறியாமல் யீசனெனவே யான் தொழுது
புண்ணியுமுன்று உன்னைப் புகழ்ந்தேன் குருபரனே. (7)

அரியயனுங்காணாத அரும்பொருளைக் காணவென்று
குறியாகநின்று கும்பிட்டேன் குருபரனே. (8)

இருவினையுந் தீருமென்று யென்னாளும் ஏங்கினின்று
குருவடிவைத்தேடிக் கும்பிட்டேன் குருபரனே. (9)

தருமரென்றுன்னைத் தாள்பணிந்தேன் நித்தநித்தம்
வருவினையெல்லாம் மாற்றுங் குருபரனே (10)

அத்திமுகனை யனுதினமும் யான் பணிந்து
முத்திதாருமென்று உருகினேன் குருபரனே. (11)

கப்பலுந் தோணியுங் கவிழ்ந்துமே வீழ்குமுன்னே
ஒப்பநிலைதாரும் ஓம் ஸ்ரீ குருபரனே (12)

தோணிக்குக்கப்பல் துணையாக நின்றதுபோல்
கணத்தில்வந்து யென்னைக் காருங் குருபரனே. (13)

தண்ணீரிலே கிடக்குந் தவளையைப்போல் கத்தியானும்
புண்ணிய வானென்று புகழ்ந்தேன் குருபரனே. (14)

அன்னியமாய்ப் போகாமல் ஆள்வாயென்று யானும்
உன்னிதமாய்த் தேடி உருகினேன் குருபரனே. (15)

நானென்ற ஆணவத்தை யானறுக்க வேணுமென்று
கோனவனைத் தேடிக் கும்பிட்டேன் குருபரனே. (16)

நம்பினேனுன்னை நல்லறிவு வேணுமென்று
வெம்பி விழுமுன்னே விதிவேணுங் குருபரனே. (17)

அண்டினே னுன்னை அடுத்தே னெடுநாளும்
தண்டனை செய்யாம லருள்தாருங் குருபரனே. (18)

ஒண்டினேன் சருகுபோலுன்னைச் சதமென்றுயானும்
அண்டினேனையா அடுத்தேன் குருபரனே. (19)

தடுத்தகருவியெல்லாம் தட்டுக்கெட்டுப் போகவென்று
எடுத்தேன் சிவமாலை யிழுத்தேன் குருபரனே. (20)

புல்லரிடம் போகாமல் பல்லைமிகக் காட்டாமல்
எல்லைகண்டே ஏக யிணங்கும் குருபரனே. (21)

இழிவான வார்த்தையெல்லா மில்லையென்று தள்ளிவிட்டு
அழியாதவீடு வேணுமையா குருபரனே. (22)

பழியான பாதகங்கள் பார்த்து நடக்கும்படி
வழியாக நீயிருந்து விதிதாரும் குருபரனே. (23)

நாணமில்லாப் பிச்சை யானெடுத்து உண்டுகொண்டு
காணாதகாட்சி காட்டும் குருபரனே. (24)

கேளாத வார்த்தையெல்லாம் கேட்டுமகிழ்ந்துகொண்டேன்
பாழாகப் போகாமல் பாரும் குருபரனே. (25)

பூணாத ஆபரணம் பூணவேணுமென்று யானும்
காணாத ஞானக்கண் காட்டும் குருபரனே. (26)

வல்லவனைத் தேடித்தேடி வாயாலே கூவிக்கூவி
எல்லையைக் காட்டுமென்று ஏங்கினேன் குருபரனே. ()

நாலுவேதங் கடந்துயானும் வெளியேற வேணுமென்று
பாலத்து மேலேறிப் பாவித்தேன் குருபரனே. (28)

நாணமில்லாப் பாகதியில் யானிருந்து வாழவென்று
கோணமல் நின்ற சிவம் குருவே குருபரனே. (29)

எண்ணில்லாப் பிறவி யெடுத்ததுவுங் காணுதோ
அன்னை பிதாவிருக்க அலுப்போ குருபரனே. (30)

அப்பனைத்தேடி அழுது கொண்ட பிள்ளையைப்போல்
தப்பிதம் வந்தாலும் தாங்கும் குருபரனே. (31)

தாயார் வயிற்றிலே ஜனித்திருந்த நாள்முதலாய்
ஓயாப் பெருங்கவலை உழன்றேன் குருபரனே. (32)

ஒன்றிரண்டு வயதுதனில் வூர்ந்து விளையாட்டிலே
அன்னை பிதாவாயிருந்த அறிவறியேன் குருபரனே (33)

அய்யாவேயென்று அகலமாய டுத்துத்தேடி
குய்யோ முறையோவென்று கும்பிட்டேன் குருபரனே.(34)

கும்பிட்ட கையாலே கோவிலைக் காணவென்று
தப்பிட்ட எருதுபோல் தனித்தேன் குருபரனே. (35)

தனித்துமே நின்று தலைவனைக் காணவென்று
இனித்துயரம் தீருமென்று ஏங்கினேன் குருபரனே. ( )

ஏங்கி மிகவாடி இயமனையே கொல்லவென்று
தாங்கியே யுன்பாதம் தழுவினேன் குருபரனே. (37)

தழுவியுனைப்பணிந்து தவம்பெற வேணுமென்று
பழியெல்லா முனக்கே பகர்ந்தேன் குருபரனே. (38)

பகர்ந்தேன் பழவினையைப் பாராம லோட்டிவிட்டேன்
கவிழ்ந்து கருவிபோக கண்ணே குருபரனே. (39)

குருமலை யேறிக் குடியிருக்க வேணுமென்று
தெருத்தெரு வெங்குந் தேடினேன் குருபரனே. (40)

தேடியலைந்தேன் திட்டி வாசல் காணவென்று
பாடிக்கொண்டு உன்னைப் பணிந்தேன் குருபரனே. (41)

பணிந்துகொள்ள வேணுமென்று பாக்காலை நீட்டியானும்
அணிந்து கொள்ளவேணுமென்று அய்யா குருபரனே.

அய்யாவே நீதானே அநேககோடி ஜீவருள்ளே
யையாநீ வேடம்போட்டது பகுத்தறியேன் குருபரனே. (43)

பகுந்தாயே பலகோடிப் பயிர்களா யுண்டுபண்ணி
மகுத்தாகப்போன வகையறியேன் குருபரனே. (44)

வயதறியமாட்டாமல் நீவைத்த வரிசைக்குள்ளே யானும்
நயந்து கொண்டென்னாளும் நாடினேன் குருபரனே. ()

நாளும் பொழுதும் நமனென்றறியாமல்
பாழான வுலகத்தைப் பாவித்தேன் குருபரனே. (46)

பாவித்தேன் பிறந்திறந்து பலகோடி ஜீவனாக
ஆவித்தேனுன்னை அய்யா குருபரனே. (47)

அய்யாவே நீயும் அகிலமெல்லாம் அயலாக
மெய்யென்று நம்பும்படி விதித்தாய் குருபரனே. (48)

விதித்தாயே மோகமெல்லாம் விஞ்சை மந்திரத்தாலே
பதித்தாயே காமமென்று பரனே குருபரனே. (49)

பரனென்று நீயிருந்து பார்தனிலே மோகமாகி
உருவாய்ப் பிறந்தவிதம் உளவறியேன் குருபரனே. ()

உழுவெல்லாம் நீயே உண்டு சுகிப்பதெல்லாம்
கனவென்று கலந்த கருத்தறியேன் குருபரனே. (51)

கருத்தாக நீயிருந்து கலந்துபல ஜீவனுக
உருவான கணக்கு உளவறியேன் குருபரனே. (52)

உழுவாக நின்று உலகமெல்லாம் வித்துவிதை
பழமாக நின்ற பயனறியேன் குருபரனே. (53)

பயனறியமாட்டாமல் பலஉயிராய்ப் பிறந்திறந்து
தயங்கித் தலமறியத் தாரும் குருபரனே. (54)

தாருமென்று யானும் தானென்றுதான் பணிந்து
வாருமென்றவெனக்கு வழிகாட்டும் குருபரனே. (55)



உ

# குருவாக்கியம்.



முக்தியென்ற மும்மூலம் நமக்குள்ளாச்சு
முக்கண்ணனென்றதுவும் நமக்குள்ளாச்சு
பக்தி வைராக்கியமும் நமக்குள்ளாச்சு
பகலிரவுமற்ற விடம் நமக்குள்ளாச்சு

பக்தி சிவமமர்ந்ததுவும் நமக்குள்ளாச்சு
பரசிவ பஞ்சாக்ஷரமும் நமக்குள்ளாச்சு
அத்திமுகத்தைங்கரனும் நமக்குள்ளாச்சு
அருள்ஞானச் சுடரொளியும் நமக்குள்ளாச்சு. (1)

கோவிலுக்குள்ளே யான் சென்றேனங்கே
குருபரன் லிங்கத்தையறிந்துமே கொண்டேன்
தாவிப் பணிந்துமே நின்றேன்—பரந்
தானே தானுகத் தனித்தேனென் சொல்வேன்(சிவாயம்)(2)

இருவினைப் பற்றைக் கொன்றேன் சும்மா
யிருவென்று சொன்னதை யறிந்தேயுள் நின்றேன்
குருபரனெனக்குமே சொன்ன—அருள்
குறிப்பதை யென்னென்றெடுத்து இயம்புவேன். (சிவாயம்)

தூங்காமல் தூங்கவுஞ் சொன்னுன் அங்கே
சுட்டற்றபாடியை சுட்டியே சொன்னுன்
நீங்காதிருக்கவுஞ் சொன்ன—னிந்த
நிச்சயத்தைக் கண்டே யச்சந்தெளிந்தேன். (சிவாயம்) (4)

பேதமறுக்கவுஞ் சொன்னுன் சும்மாப்பேசாமல்
பேசிமகிழவுஞ் சொன்னுன்—போத
மறியவுஞ் சொன்ன—னிந்தப்
புதுமையறிந்து நானதுவாக நின்றேன். (சிவாயம்) (5)



ஓம் தத் சத்.
பரப்பிரஹ்மணே நம.

# ஸ்ரீலஸ்ரீ சண்முகானந்தசாமி சற்குரு ஸ்துதி.



## சங்கராச்சாரியார் ஸ்துதி.

---

ஆரணப் பொருளையெல்லாம் ஆதரவாயெனக்குத்
தாரணையாய் உரைத்துச் சஞ்சலந் தன்னைத்தீர்க்கக்
காரணகுருவாய் நல்ல கடற்கரை தன்னில்போந்த
பூரணசொரூபா உந்தன் பொன்னடிக்கமலம் போற்றி.



## குரு ஸ்துதி.



கோசமாங் குகைக்குள் வாழ்ந்துகொடு நாசமாய்ப் போகும்
பாசமாங் கட்டவிழ்த்துப் பரமனுயாக்கவென்று [போது
ஈசனே ஆசானுகி இன்புடனிங்கு வந்த
மாசறு ஜோதி யுந்தன் மலரடி போற்றி போற்றி. (1)

சப்த சாகரங்களுண்டு சப்த மேகங்கள் பொழிந்தால்
இத்தரை மடுக்கள் ஏரி யிருந்திடில் பொறுக்குமோ தான் நீர்
முத்தமிழ் கடலையுண்டு மொழிமழைபெய்தால் என்றன்
அகத்திரு செவித்தடங்கள் காணுமோ கழறுவீரே. (2)

கள்ளமா மனதைத் தேய்த்துக் கருணையாலெனை ரட்சித்து
உள்ளமே கருணைகூர்ந்து உபநிடதப் பொருளையேற்றித்
தெள்ளிய பொருள் ஈதென்றுத் திடமதாயெனை யாட்
[கொண்ட
வெள்ளமா மதயானைக்கு மேலதோர் பொருளுமில்லை. (3)

அசத்தனில்சத்தைக்காண அபேட்சைகொண்டிருந்தஎன்றன்
வசத்துடன் மனதை நோக்கி வறுமைதீர்த்து எனைரட்சித்து
நிசப்பொருள் இன்னதென்று நிர்ச்சிந்தனுக்கிவைத்த
கசப்பில் சீர் சிவ சண்முகானந்தர் கழல்கள்போற்றி. (4)

## வேறு.

சீர்பெருகுஞ் சச்சிதானந்தமாகிய
சின்மயனே குருநாதா
பார்முழுதும் பரமாகி
நிறைந்தவென் பாக்கியமே குருநாதா. (1)

மூலவியாதிதீர முக்திக்குளிகைதந்த
மூர்த்தியல்லவோ குருநாதா
காலபாசத்தினிலே காட்டிக்
கொடாமலென்னைக் காத்துரட்சித்த குருநாதா. (2)

யாரறிவார் எனக்கருளிய
அனுபவம் ஆண்டவனே குருநாதா
பேரறிவாகிய பிரமநிலைக்கடை
பேசறியேன் குருநாதா. (3)

அந்தகன் போலவே அலைந்துதிரிந்த
வென்னை ஆண்டவனே குருநாதா
சிந்தை மகிழ்ந்திடச் சிவபதம்
அருளிய சேதனனே குருநாதா. (4)

பந்த மோட்சமென்று பேசறியாதொரு
பேதையல்லவே குருநாதா
சந்ததம் அனுபவமாக வேதாந்தத்தைச்
சாற்றிவைத்தாய் குருநாதா. (5)

மரமேறிக் கைவிட்டமானிடர் போலவே
மாண்டு பிறவாமல் குருநாதா
திறமெனக் கீந்ததும் தேவரீரல்லவோ
தேசிகனே குருநாதா. (6)

சகசப்பேச்சினில் சமரசபதம்தந்த
சாமியல்லவோ குருநாதா
பரமரகசிய பதமெனக்கீந்த
பரிபூரணனே குருநாதா. (7)

நித்திய நிரஞ்சன நிர்மலமாகிய
நிர்குணனே குருநாதா
சத்திய ஞானனந்த சமரசபதம்தந்த
சாஸ்வதனே குருநாதா. (8)

புத்திக்குச் சாட்சியா போதமதாகிய
பூரணனே குருநாதா
பக்தி வைராக்கியம் பழமறைநூல்களில்
பழம்பொருளே குருநாதா. (9)

முக்திப்பரமசுகம் முன்னமே
தன்னுள்ளேயிருந்தாலும் குருநாதா
அத்திக்குச் சாட்சியாய் அறிகிற
அநுபவம் யார்தருவார் குருநாதா. (10)

சுத்தியில் ரசதம்போல்தோனும்
பிரபஞ்சமென்று சொல்லுமையா குருநாதா
யுக்தி அநுபவங்கள் சொல்லி உலகப்பேயை
ஒழிக்குமோ நூல் குருநாதா. (11)

நிர்விஷயபதம் எனக்கு ஈந்ததும்
நீரல்லவோ குருநாதா
துர்விஷயங்களைத் தூளாக்கிய
என்துரையல்லவோ குருநாதா. (12)

சர்வமும் தானாய்ச் சமரசபதம் தந்த
சாமியல்லவோ குருநாதா
பருவதமாப் பிரதிபந்தம் அறுத்த
பழம்பொருளே குருநாதா. (13)

காசம்படர்ந்த கண்ணைக் கருவெளியாக்கிவைத்த
காரணனே குருநாதா
நாசப்பிறவியில்லா நாடெனக்கருளிய
நாயகனே குருநாதா. (14)

பாசமகற்றி யென்னைப் பதிதனில்
கூட்டிவைத்த பண்டிதனே குருநாதா
தேசம்புகழும் சண்முகானந்தனும்
எங்கள் தேசிகனே குருநாதா. (15)

குருவே சரணம் கோவே சரணம்
திருவே சரணம் தேவே சரணம். (16)



உ

ஓம் தத் சத்.

# நித்தியானந்தக் கீரைக் கும்மி.



அநுபந்த சதுட்டய நிலத்தில் கீரை கொய்யலாமே
நித்தியானந்தக் கீரை கொய்யலாமே. (1)

அஞ்ஞானமான காட்டைவெட்டி அகங்காரமாகிய புல்லைச்
[செதுக்கிக் கீரை கொய்யலாமே
நித்தியானந்தக் கீரை கொய்யலாமே. (2)

விவேகமாகிய பாத்திகட்டி வேதாந்தமாகிய விதை விதைத்
[துக் கீரை கொய்யலாமே
நித்தியானந்தக் கீரை கொய்யலாமே. (3)

வைராக்கியமாகிய வேலியிட்டுச் சமதமமாகிய தண்ணீர்
[பாய்ச்சிக் கீரை கொய்யலாமே
நித்தியானந்தக் கீரை கொய்யலாமே. (4)

உபரதி திதீட்சை யென்னும் களைபறித்துக் கீரை கொய்ய
[லாமே
நித்தியானந்தக் கீரை கொய்யலாமே. (5)

சித்தமாகிய பாத்திரத்தில் சிரவணமாகிய தண்ணீர்விட்டு
மனனமாகிய உப்பைச் சேர்த்துக் கீரை செய்யலாமே
நித்தியானந்த கீரை செய்யலாமே. (6)

முமூட்சுவாகிய வாயால் புசித்து ஜனனப்பிணி தீரக்கீரை
[செய்யலாமே
நித்தியானந்தக் கீரை செய்யலாமே. (7)

சமாதியாகிய திருப்தியடைந்து ஆருடமாகிய ஆனந்த
[மடையக் கீரை செய்யலாமே
நித்தியானந்தக் கீரை செய்யலாமே. (8)



# ஆச்சே போச்சே.

அங்கமெடுத் தலைந்து திரிந்ததும் போச்சே
அன்பே வடிவா யமர்ந்திருந்திட லாச்சே. (1)
தேகத்தை மெய்யென்றுந் திரிந்தலைந்ததும் போச்சே
தேகியே தானென்று ஸ்திரமாயிருந்திட லாச்சே. (2)
பொய்யான விக்கூட்டைப் புகழ்ந்தேயிருந்ததும் போச்சே
பொருளான உன்னையே தானென்றிருந்திட லாச்சே (3)
மூவாசை தன்னிலே மூழ்கிக்கிடந்ததும் போச்சே
மோனமே எப்போதுந் தானென்றிருந்திட லாச்சே. (4)
அனாத்மாவே தானென்ற கங்கொண்டிருந்ததும் போச்சே
ஆத்மாவே தானென்றறி வாயிருந்திட லாச்சே. (5)
தத்துவம் தன்னையே தானென்றிருந்ததும் போச்சே
தனிப்பொருளுன்னையே தானென்றிருந்திட லாச்சே. (6)
நாற்றச் சரீரத்தை நானென்றிருந்ததும் போச்சே
நாதனே யெப்போதும் தானென்றிருந்திட லாச்சே. (7)
ஆங்காரந் தன்னையே அகமென்றிருந்ததும் போச்சே
ஓங்காரந் தன்னையே உருவென்றறிருந்திட லாச்சே. (8)
பேராசை யானதோர் பேயோடலைந்ததும் போச்சே
பேரறிவாகிய பிரமமாய் நின்றிட லாச்சே. (9)
என்னைப் பாராமல் ஏமாந்திருந்ததும் போச்சே
என்னையே தானென்றுறுதியாய் நின்றிட லாச்சே. (10)

பொறிபுலன் தன்னையே பொருளென்றிருந்ததும் போச்சே
புல்லறிவைத் தள்ளிப் பேரறிவாகிட லாச்சே. (11)
அவனியே மெய்யென்று ஆடிஅலைந்ததும் போச்சே
ஆடிய பாதத்தை மெய்யென்றிருந்திட லாச்சே. (12)
மூடசரீரத்தை நானென்றிருந்ததும் போச்சே
முக்கண்ணுடையானே நாமென்றிருந்திட லாச்சே. (13)
ஆசாபிசாசுகள் ஆட்டிய ஆட்டமும் போச்சே
ஆனந்த போதமே தானுயிருந்திட லாச்சே. (14)
மௌனத்தைக் காணுமல் மயங்கித்திரிந்ததும் போச்சே
மௌனமே யெப்போதும் தானென்றிருந்திட லாச்சே. (15)
பாசக் கொடிதன்னைப் பற்றிப்பிடித்ததும் போச்சே
பரமரகசியம் தன்னையறிந்திட லாச்சே. (16)
பணஆசை தன்னோடே பற்றியலைந்ததும் போச்சே
பரிபூரண செல்வத்தைப் பற்றியிருந்திட லாச்சே. (17)
பொய்யாம் ஜகந்தன்னைப் பொருளென்றிருந்ததும் போச்சே
பூரணந்தன்னையே மெய்யென்றிருந்திட லாச்சே. (18)
தேகத்தை மெய்யென்று திகைத்தலைந்ததும் போச்சே
சிதாகாயத்தை மெய்யென்று திகைப்பற லாச்சே. (19)
என்னையறியாமல் எங்குமலைந்ததும் போச்சே
என்னிடந்தானே இடங்கண்டமர்ந்திட லாச்சே. (20)

# தங்கமே தங்கம்.

ஏகமாய் நின்றதடி தங்கமே தங்கம்—அங்கே
எல்லாமுந் தானுச்சு தங்கமே தங்கம். (1)

மூவர் முதல்வனடி தங்கமே தங்கம்—அவன்
மூர்த்திக்கும் மூர்த்தியடி தங்கமே தங்கம். (2)

ஆனந்த போதனடி தங்கமே தங்கம்—அவன்
அற்புத ரூபனடி தங்கமே தங்கம். (3)

ஆதியந்த மில்லானடி தங்கமே தங்கம்—அவன்
அடைந்தவர்க்கு கிருபைசெய்வான் தங்கமே தங்கம். (4)

ஊருமில்லான் பேருமில்லான் தங்கமே தங்கம்—அவன்
உண்மையெல்லாம் வெளியாச்சு தங்கமே தங்கம். (5)

ஆணுமில்லான் பெண்ணுமில்லான் தங்கமே தங்கம்—அவன்
அம்பலத்தி லாடுகின்ருன் தங்கமே தங்கம். (6)

பக்தருக்குப் பாங்கில் நின்ருன் தங்கமே தங்கம்—அவன்
பாமரர்க்கு விலகி நின்ருன் தங்கமே தங்கம். (7)

ஐந்தெழுத்து ரூபனடி தங்கமே தங்கம்—அவன்
அறிந்தவர்க்குப் பக்கமடி தங்கமே தங்கம். (8)

ஐந்தெழுத்து மறிந்து பார்த்தால் தங்கமே தங்கம்—அவன்
அரூபியாய் நின்ருனடி தங்கமே தங்கம். (9)

ஊமை யெழுத்தானுன்டி தங்கமே தங்கம்—அவன்
உணர்ந்தவர்க்குத் தெரியுமடி தங்கமே தங்கம். (10)

ஏழை பங்காளனடி தங்கமே தங்கம்—அவன்
இடர் தீர்த்து ஆள்வான்டி தங்கமே தங்கம். (11)

அல்லலறுத்தவர்க்குத் தங்கமே தங்கம்— அவன்
ஆதரித்துக் கிருபைசெய்வான் தங்கமே தங்கம். (12)

அகம்பிரம்மம் என்றறிருந்தால் தங்கமே தங்கம்—அது
அழிவில்லாச் செல்வமடி தங்கமே தங்கம். (13)

உற்றுற்றுப் பார்த்திருந்தால் தங்கமே தங்கம்—அது
உம்பர்பிரான் காட்சியடி தங்கமே தங்கம். (14)

மௌனமே தானுச்சு தங்கமே தங்கம்—அங்கே
மாறி நடமாடி நின்றானடி தங்கமே தங்கம். (15)

தன்னையறிந்தவர்க்குத் தங்கமே தங்கம்—அவன்
தானுகி நின்றானடி தங்கமே தங்கம். (16)

மௌனத்தைக் கண்டவர்க்குத் தங்கமே தங்கம்—அவன்
மதிப்பால் அளிக்கின்றான் தங்கமே தங்கம். (17)

ஐம்புலனை வென்றவர்க்குத் தங்கமே தங்கம்—அவன்
ஆனந்தமாயிருப்பான் தங்கமே தங்கம். (18)

மனதை ஜெயித்தவர்க்குத் தங்கமே தங்கம்—அவன்
மாற்றில்லா ஜோதியடி தங்கமே தங்கம். (19)

எங்கும் நிறைந்தவன்டி தங்கமே தங்கம்—அவன்
இணையில்லாச் செல்வனடி தங்கமே தங்கம். (20)

குருவாகி வந்தான்டி தங்கமே தங்கம்—அவன்
குடிமுழுதும் ஆண்டான்டி தங்கமே தங்கம். (21)

# நூல்.

எட்டுத்திசையும் நிறைந்த நூல்—எங்கள் நூல்
ஏகமே தானாயிருந்த நூல்—எங்கள் நூல். (1)

ஆகம வேதங்களறியா நூல்—எங்கள் நூல்.
அன்பரிடத்திலமர்ந்த நூல் எங்கள் நூல் (2)

அஞ்ஞானி பார்த்தடையா நூல்—எங்கள் நூல்
ஆனந்தமாவாரணிந்த நூல் எங்கள் நூல். (3)

திக்கெல்லாம் போற்றித்திகழ்ந்த நூல்—எங்கள் நூல்
திருவாத வூரராடைந்த நூல்—எங்கள் நூல். (4)

மௌனமே தானாயிருந்த நூல்—எங்கள் நூல்
மகத்துக்கள் தங்களாலறியும் நூல் எங்கள் நூல். (5)

போதமே தானாயிருந்த நூல்—எங்க நூல்
புலன்வழிக் கெட்டாமல் போன நூல் எங்கள் நூல். (6)

பூரணமானோர் புகழ்ந்த நூல்—எங்கள் நூல்
போக்குவரத்தில்லாரணிந்த நூல் எங்கள் நூல். (7)

குற்றமுடையா ரணியா நூல்—எங்கள் நூல்
குருவாகி வந்து குறைதீர்த்த நூல் எங்கள் நூல். (8)



# ஊர்.

சாக்ஷியே தானாயிருந்த ஊர்—எங்களூர்
தானே தானாகியமர்ந்த ஊர் எங்களூர். (1)

போதமயமாயிருந்த ஊர்—எங்களூர்
புலன்களுக் கெட்டாமல் போன ஊர் எங்களூர். (2)

ஐந்தெழுத்தாகியமர்ந்த ஊர்—எங்களூர்
ஐம்பத்தோரக்ஷர மடங்கும் ஊர் எங்களூர். (3)

சுத்தவெளியிலே தோன்றும் ஊர் எங்களூர்
சுகாதீதமா யமர்ந்த ஊர்—எங்களூர். (4)

பிரணவப் பேரொலியாகும் ஊர்—எங்களூர்
பிறப்பு மிறப்புமிலாத ஊர் எங்களூர். (5)

ஏகவெளியிலே தோன்றும் ஊர்—எங்களூர்
தத்துவமெல்லாம் கடந்த ஊர் எங்களூர். (6)

தானே தானாக அமர்ந்த ஊர்—எங்களூர்
அல்லற் பிறப்பையறுத்த ஊர் எங்களூர். (7)

ஆனந்தமாக அமர்ந்த ஊர்—எங்களூர்
அருள்வடிவாயிருக்கும் ஊர் எங்களூர். (8)

சுகதுக்கமற்றோர் சுகிக்கும் ஊர்—எங்களூர்
வேதமுடிவிலே விளங்கும் ஊர் எங்களூர். (9)

விண்ணவர் தங்கட்கெட்டா ஊர்—எங்களூர்
நான்முகன் மால்தேடி அறியா ஊர் எங்களூர். (10)
நான் மறைகளுமேற்றும் ஊர்—எங்களூர்
மௌனமதாகியிருக்கும் ஊர் எங்களூர். (11)
மாசில்லா ஜோதியாயமர்ந்த ஊர்—எங்களூர்
அம்பலந்தனிலே ஆடியது எங்களூர்
ஆனந்தமாகி யமர்ந்த ஊர் எங்களூர். (12)

உ

# மயில்கண்ணி.

## காப்பு.

ஆனை முகத்தானடி
ஐங்கரச் சாமியடி
ஞானக் குருபரனடி—மயிலே
விநாயகன் நன்மையே காப்பாமடியே.

---

சக்தி சிவமிரண்டும்
சற்குருவாய் வந்ததடி
முக்தியும் தந்ததடி—மயிலே
முதற்பொருளா னேமடி. (1)

ஞானக் குருபரன்டி
நான்மறைப் போதன்டி
தேனருள் வாயன்டி—மயிலே
சிவஞான பண்டிதன்டி. (2)

கடல்போற் கருணையன்டி
கண்மணி போன்றவன்டி
உடற்பொருளாவி யெல்லாம்—மயிலே
ஒக்கவே கொண்டவன்டி. (3)

அன்பர்க் கெளியவன்டி
ஆனந்த போதகன்டி
இன்பக் கடலாவன்டி—மயிலே
என்குருநாதனடி. (4)

அகத்திலும் புறத்திலுமே
ஆனந்தமான வன்டி
சுகத்திற் சுகமானவன்டி—மயிலே
சுந்தரத் தேசிகன்டி. (5)

அறிவுக்கறி வெனவே
ஆன்மாவைக் காட்டுவான்டி
செறிவுற்ற போதன்டி—மயிலே
சிவஞான சித்தனடி. (6)

பக்திக்கடல் தனிலே
பக்குவர்க்குத் தோன்றுவான்டி
முக்திக் கரசனடி—மயிலே
முக்குணங் கடந்தவன்டி. (7)

எங்கு மிருப்பவன்டி
யானெனத் தோன்றுவான்டி
கங்குல் பகலற்றிடத்தில்—மயிலே
காட்டுவான் என்னையடி. (8)

பேராவழ கனடி
பேரின்பமான வன்டி
யாராலு மறியானடி—மயிலே
நித்தியானந்த தேசிகன்டி. (9(

தாமரைப் பாதனடி
சற்குரு நாதனடி
ஏமனுக்கேமனடி—மயிலே
என் குருநாதனடி. (10)

முக்தி கொடுப்பவன்டி
முழுஞான சித்தனடி
பக்தருக்கின்பனடி—மயிலே
பரமானந்த தேசிகன்டி. (11)

ஆனந்த வாசகன்டி
அருட்கடலான வன்டி
ஆனந்த ஜோதியடி—மயிலே
மௌனகுரு தேசிகன்டி. (12)

கண்ணுக்குள் இருப்பவன்டி
கருத்துள்ளிருப்ப வன்டி
என்னுள் இருப்பவன்டி—மயிலே
யானெனத் தோன்றுவான்டி. (13)

அன்பருக் கன்பனடி
அகம்புறம் நிறைந்தவன்டி
துன்பந் தொலைப்பவன்டி—மயிலே
சுகமாக வைப்பான்டி. (14)

என்னுக்குள் இருப்பவன்டி
என்னையாட் கொண்டவன்டி
தன்னுக்குள் தானகவே—மயிலே
தனியே யிருப்பவன்டி. (15)

அகர்த்த வபோக்தனடி
அனைத்துக்கும் சாட்சியடி
சகத்தில் புகழோனடி—மயிலே
சற்குரு நாதனடி. (16)

பிரணவச் சோதியடி
பிரமமேயான வன்டி
கரணம் கடந்தவன்டி—மயிலே
காரண பூதனடி. (17)

தத்துமான வன்டி
தத்துவாதீ தனடி
அத்துவிதமான வன்டி—மயிலே
அபரோட்ச ஞானியடி. (18)

ஓங்கார ரூபனடி
உள்ளொளியான வன்டி
ஆங்காரம் போனவன்டி—மயிலே
அறிவாய் நிறைந்த வன்டி. (19)

தன்னை யறிந்தவர்க்குச்
சச்சிதானந்த மடி
என்னையும் ஆண்டகுரு—மயிலே
என்னுள்ளே நின்றானடி. (20)

பற்றிப் பிடித்தேனடி
பாதத்தை விடாமலடி
சித்தத்துள் நின்றானடி—மயிலே (அவன்)
சிவோகம் ஆனவன்டி. (21)

அகம் அகமென்ற ஆன்மா
அனைத்துயிரிடத்திருக்கும்
புகழ் சிவமாகுமடி—மயிலே
பொய்யில்லை மெய்யேயடி. (22)

பூத பௌதீகத்தைப்
பொய்யெனக் கண்டபின்பு
போதமேயான் மாவடி—மயிலே
புண்ணியர்க்குத் தோன்றுமடி. (23)

பானு உதயம்போல
பரப்பிரம ஜோதியடி
ஞானக்களஞ்சியன்டி—மயிலே
ஞானக் குருபரன்டி. (24)

அவித்தையைப் போக்குவான்டி
ஆனந்த மாக்குவான்டி
சிவத்தையும் காட்டுவான்டி—மயிலே
சிவகுரு நாதனடி. (25)

அறிவுப் பிரமமடி
அப்பாலொன்றில்லையடி
குறியற்ற ஜோதியடி—மயிலே
குருபரன் பாதமடி. (26)

சும்மாயிருக்கும் நிலைச்
சூட்சுமத்தைச் சொன்னவன்டி
அம்மா ஈதென்னவடி—மயிலே
ஆனந்த மானேனடி. (27)

ஞான மணங்கமழும்
நல்லருள் பொங்குமடி
ஆனந்த மாகுமடி—மயிலே
அருள் குருபாதமடி. (28)

புத்திக் குகையினுள்ளே
பூரணமாயுள்ள வென்னைச்
சத்தியமாய்க் காட்டினன்டி—மயிலே
(அதனல்) தானே தானனேனடி. (29)

தன்னாலே தன்னைக்காணத்
தத்துவஞ் சொன்னவன்டி
தன்னாலே தன்னைக் கண்டேன்—மயிலே
தானெங்குமானே னடி. (30)

சகம்பர ஜீவரெல்லாம்
தன்னிடத்தில்லை யென்றே
அகப்பிரமஞ் சொன்னனடி—மயிலே
அனுபவங் கண்டேனடி. (31)

மனவலி போனதடி
மாயையும் போனதடி
நனவில் சுழுத்திகண்டேன்—மயிலே
ஞானமாய் நானேயடி. (32)

சும்மாயிருக்கும் நிலை
சொன்னது மாமறைகள்
அம்மா பொருளறியேன்—மயிலே
அறிவாக நின்றேனடி. (33)

தேகம் நானல்லவடி
ஜெகமெல்லாம் பொய்யடியே
ஏகமாம் வஸ்தேதடி—மயிலே
எனக்கறியச் சொல்லடியே. (34)

தேனுடன் முப்பழமும்
தெவிட்டுமே தின்றவர்க்கு
ஞானப்பழமடியே—மயிலே
நம்குருபாதமடி. (35)

கோசம் நீயல்லவடி
குவலயம் பொய்யடியே
யீசனீ யானுயடி—மயிலே
என்னுனை சொன்னேனடி. (36)

அகம்பிரம மானேனடி
அறிவாக நின்றேனடி
சகம்பர ஜீவரெல்லாம்—மயிலே
சத்தியம் இல்லையடி. (37)

ஈசனும் ஞானியடி
எப்போது மொன்றடியே
பாசந் தொலைப்பானடி—மயிலே
பரமசற்குரு நாதனடி. (38)

புத்தியினன்புடனே
புண்ணியன் குருபாதத்தில்
பக்தியே வேண்டுமடி—மயிலே
பரிசுத்த மாகவடி. (39)

ஜோதிக் கமலனடி
சுகஞான மேனியன்டி
ஆதிப்பிரமமடி—மயிலே
மௌனகுரு தேசிகன்டி. (40)

பஞ்சாமிர்தன்டி
பழனிவேல் முருகன்டி
அஞ்சாதே யென்பானடி—மயிலே
அருளீசனைக் கூவடியே. (41)

ஆடு மருள் மயிலே
ஆனந்த மாமயிலே
பாடும் புகழ் மயிலே—நீ தான்
பரமேசனைக் கூவடியே. (42)

மயிற்கண்ணி முற்றுப்பெற்றது.



உ

ஓம் தத் சத்.

# பாம்பாட்டி ஆனந்தக் களிப்பு.



ஆடுபாம்பே நீ யாடுபாம்பே
ஆனந்தக்கூத்தன் முன்னின்று பாம்பே.

ஐங்கரனார் பொன்னடியை யந்திசந்தி
ஆறுமுகன் சேவடியைச் சிந்தைசெய்து
நங்கை சிவகாமியுமை தன்னைப்போற்றி
நடராஜன் முன்னே நின்றாடுபாம்பே. (1)

ஞானமலை மேலிருக்கும் நல்லபாம்பே
ஞான நடங்கண்டனையோ நாகப்பாம்பே
ஊனென்னும் பெட்டகத்திலுள்ள பாம்பே
ஓங்காரமாகவே நின்றுடுபாம்பே. (2)

ஆங்காரப்படம் விரித்தாடுபாம்பே
ஐயனடி கண்டதிலே யடங்குபாம்பே
பாங்கான வெளிதனிலே ஆடுபாம்பே
பரமேசனுக்காபரணமான பாம்பே. (3)

பச்சை முகின்மேனியர்க்குப் படுக்கையானாய்
பராசக்தி உமையவட்குப் பணியுமானாய்
நிச்சலன ஈசனுக்கு நேசமானாய்
நின்குணம்போய் பொன்குணமாயாடுபாம்பே. (4)

அஞ்ஞானப்பாம்பு வந்தேபடுக்குமானால்
அறிவென்னு மந்திரத்தாலடக்கிடுவேன்
மெஞ்ஞானக் குளிகையினால் விஷங்கெடுத்து
விண்ணென்ன நின்றேமென் றுடுபாம்பே. (5)

நாதர் முடிமேலிருக்கும் நல்லபாம்பே
ஞானமணியாபரணம் நல்குவாயே
போதமணிப் பொன்கலனைப் புகழ்ந்துகொண்டு
புண்ணியசற்குரு பதத்தில் பூட்டுபாம்பே. (6)

ஆனந்தக் கூத்தன் பணியான பாம்பே
ஆங்காரம் பொங்காமல் நின்றாடுபாம்பே
தேனமர்க் கொன்றையணி யீசனடியில்
தெளிந்து தெளிந்து நின்றாடுபாம்பே. (7)

சுத்தமதிக் கங்கைச்சடை யீசனுர்க்கு
மகிழ்வான வாபர்ணந் தானுமாவாய்
சுத்தமனமாக நின்று சொக்கிப்பாம்பே
ஜோதியுமைப்பாகன் முன்னுடுபாம்பே. (8)

சந்திரனைச் சூரியனைத் தீண்டுவாய்நீ
சங்கரனுக் காபரணந் தானுமாவாய்
மந்திரத்திற் கடங்குவாய் வளைந்துகொண்டு
வள்ளல் நடேசன் முன்னே யாடுபாம்பே. (9)

கோசங்களென்னும் குடமுடைந்துக்
குருபாதந்தன்னிலே நின்றுகொண்டு
பாசங்களாசையென்னும் பல்லைவாங்கிப்
பற்றற்று நின்றேமென் றாடுபாம்பே. (10)

ஓங்காரப் பெட்டியிலுள்ளடங்கி
உச்சி வெளியிலே ஓடியேறி
தேங்காமற் றேங்கியே நின்றுகொண்டு
சிவகுரு பாதத்தினின்றாடு பாம்பே. (11)

ஞானவெளியிலே நாவைநீட்டி
நானென்னும் ஆங்கார வாயைமூடி
மோனவெளியிலே நாட்டங்கொண்டு
முந்தியடைந்தேரமென் றாடுபாம்பே. (12)

சந்திர சூரியர் தானடங்கும்
சச்சிதானந்த மாமலைதனிலே
அந்திர மந்திரங் கொண்டுயேறி
ஆனந்த மானேனென் றாடுபாம்பே. (13)

ஓடாதே வாடாதே வொளிந்திடாதே
ஓங்கார வாளினால் வெட்டிடுவேன்
கோடாமல் குண்டலியானபாம்பே
குருநடராஜன் முன்னாடு பாம்பே. (14)

அந்திரத்திலோடு மதியாதவரை
அகங்காரங் கொண்டுபோய்த் தீண்டிடுவாய்நீ
சிந்தைதனக் கெட்டாத சிவன்றனக்குச்
சிறப்பான ஆபரணமான பாம்பே. (15)

அஞ்சுமுக மீசருக் காபரணமானாய்
அஞ்சும்படி யாவரையு மடக்கியாள்வாய்
நஞ்சுப்பையுள்ள வாயினவை நீட்டி
நடராஜன்முன்னே நின்றாடு பாம்பே. (16)

சூரியன் முன்னின்று நீ நஞ்சைவாங்கி
தோன்றுமலெவருக்கும் மறைந்திருப்பாய்
பூரண நடேசன்றன் பாதப்போதை
புகழ்ந்து புகழ்ந்து நின்றாடு பாம்பே. (17)

தெய்வமலையிலே யிருக்கும் பாம்பே
சிவனுக்கு நல்லாபரணமான பாம்பே
பையுடனேபடம் விரித்தாடு பாம்பே
பத்தியா யீசன் முன்னேயாடு பாம்பே. (18)

மனமென்னுமாயையாய் மயக்கும் பாம்பே
மன்றிலாடுமீசன் முன்னாடு பாம்பே
கனவென்னு முலகை நீ காணுபாம்பே
கனகசபேசன் முன்னாடு பாம்பே. (19)

தலையிலே மணியினை வைத்துக்கொண்டு
தானிருள் தேடினால் கிடைக்குமோசொல்
மலைமகள் பாகமாய் வைத்தயீசன்
மலரடி முன்னே நின்றாடு பாம்பே. (20)

சகமுகந்தன்னிலே சார்ந்திடாதே
சச்சிதானந்தமாய்த் தானிருந்து
அகமுகந்தன்னிலே யறிவாய் நின்று
ஆனந்தங்கொண்டு நீயாடு பாம்பே. (21)

சோதிமலையிலே வாழும் பாம்பே
தோன்றாத் காலுடனோடும் பாம்பே
காலையேயுண்டு பசி தீர்த்துக்கொண்டு
கருணை நடேசன் முன்னாடு பாம்பே. (22)

தேனுடன் பாலான நான்கொடுப்பேன்
சிந்தைக் குகையிலே திகழ்ந்து நின்று
வானவர் யாவருக்கு மருளுமீசன்
மலரடிகண்டு நீயாடு பாம்பே. (23)

சோலைவயல் வளஞ்சேருந்தில்லைச்
சோதி சிதம்பர சிற்சபேசன்
ஆலத்தை யமுதாகக் கொண்டவைய
னடிமலர்க்காளாய் நின்றாடு பாம்பே. (24)

அறிவுமலையின் மேலேறிடுவோ
மானந்தத் தேனுண்டு வாழ்ந்திடுவோம்
வெறியற்ற ஞானத் தீவிளக்கிடுவோம்
வேதாந்த வீட்டிலென்றாடு பாம்பே. (25)

ஆறுதலத்துடனண்டமுட்டி
அங்கங்கு நின்று நின்றாடுபாம்பே
வேறுபிறிதிலா வெளிதனிலே
வேடிக்கை காட்டு வோனாடுபாம்பே. (26)

துரியவடிவு நானென்றுனக்குச்
சொல்லியுங்கேளா மலோடுவாயேல்
அரியவறி விஞலடக்கிடுவேன்
அகங்காரம்விட்டு நின்றாடு பாம்பே. (27)

சீவனுஞ் சிவனு மொன்றல்லரோ
திருவான தேசிகன் சிவனல்லஞே
யாவரு மறிவரோ இந்தவுண்மை
ஆனந்தமாக நின்றாடு பாம்பே. (28)

தத்துவமசியென்ற வாக்கியத்தால்
தன்னையுங் காணலாந்தடையதின்றி
அத்துவிதமான வரகண்டமாகி
ஆனந்தமாஞரென்றாடு பாம்பே. (29)

அறிவு சொரூபமாமம் மையார்தன்
அகண்ட சொரூபமாமப்ப ஞர்தன்
சிறியவர் பெரியவர் யாவருக்குஞ்
சிவனருள் வேண்டுமென்றாடு பாம்பே. (30)

நதிமதி கொக்கிறகுமாமையோடு
நஞ்சுமழு நாகத்தோல் நண்ணிநின்ற
அதிபதியாவருக்கு மானயீசன்
அடைக்கலமாஞேமென்றாடு பாம்பே. (31)

அங்கென்று மூங்கென்றும் பேசிடாதே
ஆனந்தமென்று நீ சொல்லிடாதே
மங்கென்று சிங்கென்று மவுனமாகி
மனோன்மணி முன்னே நின்றாடுபாம்பே. (32)

ஓமென்று ரீங்கென்று பேசிடாதே
யோகப்பொருளென்று சொல்லிடாதே
ஆமென்று ஊமென்று மறிந்துகொண்டே
அம்மை முன்னே நின்றாடுபாம்பே. (33)

வசிவசியென்று நீ வாயினாலே
மாறாமல் சீக்கிரஞ் சொல்லும்போது
சிவசிவ வென்று மெய்யாகுமென்றே
சிவனாணை சொன்னே னென்றாடுபாம்பே. (34)

ஓமென்ற குடிலத்தைப் பேசிடாதே
ஒடுங்குமே பிராணனென்ற பாம்பு
தாமென்று தீமென்று தாளம்போட்டுத்
ததிங்கணத் தோமென்றே யாடுபாம்பே. (35)

அஞ்செழுத்துண்மையைக் காணமாட்டார்
அண்டமும் பிண்டமும் பந்தமுத்தி
குஞ்சிதபாதமே படைக்குமென்றே
குருபரன் முன்னே நின்றாடுபாம்பே. (36)

ஆனந்தக் கூத்தும் மஞ்செழுத்தே
அருட்கடலானது மஞ்செழுத்தே
ஞானமும் மோட்சமு மஞ்செழுத்தே
நடராஜன் முன்னே நின்றாடுபாம்பே. (37)

ஆதியருளுமை சிவை வாழி வாழி
ஆனந்த யீசனும் வாழி வாழி
பேதமறுத்தவர்கள் வாழி வாழி
பிரமமாயிருப்பவர்கள் வாழி வாழி. (38)

பாம்பாட்டி ஆனந்தக்களிப்பு முற்றிற்று.



உ

ஓம் தத் சத்.

பரப்பிரஹ்மணே நம:

# பலதிரட்டு ஸ்தோத்திரம்.

## வினாயகர் ஸ்துதி.

அடையு மடியார்க்கருள்செய்யுங் கோவே
திடமுடனே எற்கருள் செய்வாய்—படியில்
பிரசித்தி பெற்றுள பேரின்ப ஞான
வரசித்தி வாரண தேவா.



## சுப்பிரமணியர் ஸ்துதி.

பூர்வ ஜனனமுதல் இப்பிறவிமுடிவுபெறப்
போதும் நான்பட்டதுன்டம்
பெல்லாதெத்தனை கல்லாதெத்தனை
பூத ஜென்மங்களுற்றேன்
சீர்மிகும் நின்து செந்தாமரைப்
பதமதைச் சேவிக்குமடியார்களைத்
தினம் தெரிசனம் செய்தேனோ
செய்யாமலிருந்தேனோ செய்திருந்தால் பிறவியேன்,
யாரிருந் தின்னமும் பின்துன்பம் நீங்கவே
யருள்புரிவதற்கு உனையலால் வேறுமுளதோ,
அண்ட உலகத்திலும் பூமண்டலத்திலும்
அதல சுதலத்திலும்,
இலைதார்மிகும் சூரசங்கரா, மயில்வீரனே,
தமயன் பாஸ்கருணையாளா
சரவணயிலே பிறந்தருள் உருவாய்வரும்
தருபரங்கிரி கந்தனே. (1)

சீலமிகு தற்பரனே உன்னித்துத்
தேகத் தியானம் தெளிந்து பொங்கி
சில்லென்று மெய்மறந்து
ஆனந்தமௌனம் ஜெனிக்க;

குவிந்து கண்ணீர் ஆவியொழிய
உள்ளங்கருணை கனிந்துருக;
அன்புருக என்புருக அங்கங்குழைந்து
புளங்காங்கித்து நிற்க
குருவாரப்படி ஒன்றறிவேனோ
காலங்கழித்துண்டு வீணுக்கலைந்துபல
காலப்பிரபஞ்ச மாயைக் கடற்குளே
பணிந்தேயிருக்கின்ற பாசங்கட்கும் படிக்கருள்செய்வாய்
தாலமோடுண்ட நீலகண்ட கோகண்ட
மாசரச கோபால மருகா
சதுர்மறைகளே தந்த பரமகுருவாய்வந்த
சரவணபவா நந்தனே. (2)

திருவருள் வேதாந்த நாதாந்த மூர்த்தியே
தேவப்பிரகாச வடிவே
தேவாதி தேவனே ஐங்கரநந்தனே
சிவகாமி யருள்பாலக
அருட்பெரு கடாட்சமுள்ள
தற்பரவிநோதனே அத்துவிதமானமுதலே
ஐயனே இவ்வுலகில் மெய்யான தெய்வம்
உனையலது வேறுமுளதோ!

ஒருபோது மறவாத சிஷ்யனும்
யென்மீதில்உள்ள முருகாதேதேதோ!
கருணைதானுமில்லையோ உமக்கென்ன
வெகுபாரமோ வரந்தரத் தருணமிதுதானையா
மேலானபுத்தி சாந்தமுந்தந்து
அமிர்தம் தனுத்துவரக் கல்விமிகச்
செல்வமும் கந்தனே தந்தருள் வாய். (3)

அறுவிதச் சமயத்தோர்க்கும் ஆறுமுகச்சாமியாகி
செறிபரப்பிரம்மம் யாமேயென்று சின்மயிலேறிக்
குறுமுனிக்கருளிச் சீவக்குகைதோறும் வீற்றிருந்த
மறுவிலாக்குகனைப்போற்றி மாய்த்தனன் பிறவியெல்லாம்(4)

ஆறுமுகப் பெருங்கருணைக்கடலே தெய்வயானை
மகிழ்மணிக் குன்றினாமேச முக்கட்;
பேறுமுகப்பெருஞ் சுடர்க்குட் சுடரே செவ்வேல்
பிடித்தருளும் பெருந்தகையே பிரமஞானம்;
வீறுமுகப் பெருங்குணத்தோரிதயத்தோங்கும்
விளக்கமே ஆனந்தவெள்ளமே முன்
தேறுமுகப் பெரியவருட் குருவா யென்னைச்
சிறுகாலையாட்கொண்ட தேவ தேவா. (5)

## சிவன் ஸ்துதி.

அண்டபகி ரண்டமுதல் எண்டிசை யடங்குதல்
ஆதியாய் நின்ற பொருளே
அரிஅயன் சிவனென்னும் மூத்தத் துவத்திலும்
அமர்ந்திலகி நின்ற பொருளே
பண்டைமறை முடிவிலுந் தொண்டர்க ளிடத்திலும்
பண்பாக நின்ற பொருளே
பகரரிய வேதாந்த சித்தாந்த சமரச
நன்னிலைதனில் நின்ற பொருளே
கொண்டலாய் நின்றடியர் சித்தத்தில் ஞான
மழை கொட்டிடும் பெரிய பொருளே
கோதிலா முக்திக்கு வித்தாகி வித்தி
லுற்ற பலனாகும் உன்னை
அண்டினேன் பெண்டு நானுனும் நின்
கருணையான வாருதி நீரினலாட்டி
நின்பாதை வழிகாட்டி யென்னை யாளுவாய்
ஆதிமறை ஜோதி மயமே. (1)

பரமஞானமாம் பாற்கடல்மன்னிய பரமனேயடிபோற்றி
கரதலாமலத்தின் நேர்பரஒளி காட்டிடும்கழல் போற்றி
ஒருபராபரமின்றி நீ ஒருவனுமாகிய ஒளிபோற்றி
பிரம நாரணசங்கரா போற்றி என்பெருமான் நின்பதம்
[போற்றி போற்றி. (2)

நித்தியானந்தமாகி நிட்கள சொரூபமாகிச்
சத்தியாய்ச் சிவமுமாகித் தானு வாயுலகுக்கெல்லாம்
சித்தியாய் முத்தியாகித் திகழ்பரமார்த்தமாகி
யத்தியினுருவமான அண்ணலை வணங்குவோமே. (3)

## பராசக்தி ஸ்துதி.

பொய்யாத மொழியும், மயற் செய்யாத
செயலும், வீண்போகாதநாளும்
விடயம் புரியாத மனமும்,
உட்பிரியாத சாந்தமும்
புத்தி தளராத நிலையும், எய்யாத
வாழ்வும், வேறொன்ற
றெண்ணாத நிறைவும், நினையென்றும்
மறவாத நெறியும்
இறவாத தகவும், மேற்பிறவாத
கதியும், இவ்வேழையேற்
கருள்செய் கண்டாய், கொய்யாது,
குவியாது, குமையாது,
மணம் வீசும் கோமளத்
தெய்வமலரே, கோவாத முத்தமே,

குறையாத மதியமே, கோடாத
மணிவிளக்கே, அய்யா
நான் கொண்ட தில்லையம்பதிமருவும்
அண்ணலார் மகிழும் மணியே,
அகிலாண்டமுஞ் சராசரமும் ஈன்றருள்
பரசிவானந்த வல்லி யுமையே. (1)

மாயை யெனு மிரவிலென் மனையகத்தே
விடயவாதனை யெனுங் கள்வர்தாம் வந்து
மனவடிமையை யெழுப்பி அவனைத்தமது
வசமாக வுளவுகண்டு
மேயமதி யெனுமொரு விளக்கினை
யவித்தெனது மெய்நிலைச் சாளிகையெலாம்,
வேறுறவுடைத்துள்ள பொருளெலாங்
கொள்ளை கொள
மிக நடுக்குற்று நினையே நேயமுற
வோயாது கூவுகின்றேன்
சற்றும் நின் செவிக்கேறவிலையோ,
நீதியிலையோ, தருமநெறிகளிலையோ,
அருளிறையுமிலையோ, என்செய்வேன் ஆயமறை
முடிநின்ற தில்லையம்பதிமருவும் அண்ணலார்
மகிழுமணியே, அகிலாண்டமுஞ் சராசரமு
மீன்றருள் பரசிவானந்த வல்லியுமையே. (2)

ஆண்டகுருவே கண்மணியே,
அருளே, நீ நானென்றாகப்
பூண்ட வடிவே, என்னுடைய
புத்தியதனில் நின்றுணர்த்தி
ஈண்டப்படியே எங்ஙனி
விருந்துரைக்க வேண்டிடுநீ
நீண்ட மாலும், அயனும்
போற்றும் நிமலவிருத்த நாயகியே. (3)

ஊனாய் உழல்வேன் தனையாண்ட
உமையே, பரையே: உயிர்க்குயிரே,
தானாய்நிகழும் சுய ஒளியே,
தாயே விருத்தாம்பிகையே,
ஞானரசம் விளக்கும்
ஞானசார மெனக்கருளி
நானுநீயே யென்னுடைய
நாவில்நின்று உரைசெய்வாய். (4)



## தாயுமானவர் பாடல்.

---

நினைவொன்றும் நினையாமல்நிற்கின் அகமென்பா்!
நிற்குமிடமேயருளாய் நிஷ்டையருளொட்டும்
தனையென்றும் மறந்திருப்ப அருள்வடிவானதுமேல்
தட்டியெழுந்திருக்கும் இன்பம் தன்மயயே யதுவாம்
பினையொன்றுமில்லை, அந்த இன்பமென்னும்
நிலையம் பெற்றரே பிறவாமை பெற்றார்; மற்றும்தான்
மனையென்றும், மகவென்றும், சுற்றமென்றும்,
அசுத்தவாதனையாம் ஆசையொழி மன்னொரு சொற்
கொண்டே. (1)

நிர்க்குண! நிராமய! நிரஞ்சன! நிராலம்ப!
நிர்விஷய! கைவல்யமா
நிஷ்கள! அசங்க! சஞ்சலரகித! நிர்வசன!
நிர்தொந்த! நித்த! முக்த!
தற்பர விஸ்வாதீத! வ்யோம! பரிபூரண!
சதானந்த! ஞான! பகவ!
சம்பு! சிவ! சங்கர! சர்வேச! என்றுநான்
சதா காலமுநினை வனோ
அற்புத! அகோசர! நிவர்த்திபெறும் அன்பருக்கு
ஆனந்த பூர்த்தி யான

அத்துவித நிச்சய! சொரூப சாக்ஷாத்கார
அனுபூதி அனுரூதமும்
கற்பனையறக் காண முக்கணுடன் வடநிழற்
கண்ணாடிருந்த குருவே
கருதரிய சிற்சபையில் ஆனந்த நிர்த்தமிடு
கருணாகரக் கடவுளே. (2)

அங்கைகொடு மலர்தூவி அங்கமது புளகிப்ப
அன்பினனு ருகி விழிநீர்
ஆறாக வாராத முக்தியின தாவேச
ஆசைக் கடற்குள் மூழ்கிச்
சங்கர சுயம்புவே சம்புவே யெனவுமொழி
தழுதழுத்திட வணங்குஞ்
சன்மார்க்க நெறியிலாத் துன்மார்க்கனேனையுந்
தண்ணருள் கொடுத்தாள்வையோ
துங்கமிகு பக்குவச் சனகன்முதல் முனிவோர்கள்
தொழு தருகில் வீற்றிருப்பச்
சொல்லரிய நெறியையொரு சொல்லா லுணர்த்தியே
சொரூபா நுபூதி காட்டிச்
செங்கமல பீடமேற் கல்லாலடிக்குள் வளர்
சித்தாந்த முத்தி முதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
சின்மயா னந்த குருவே. (3)

கல்லாத அறிவுமேற் கேளாத கேள்வியும்
கருணை சிறிதேது மில்லாக்
காட்சியும் கொலைகளவு கட்காமம் மாட்சியாக்
காதலித்திடும் நெஞ்சமும்
பொல்லாத பொய்மொழியு மல்லாது நன்மைகள்
பொருந்து குணமேது மறியேன்
புருடர் வடிவானதே யல்லாது கனவிலும்
புருடார்த்த மேது மில்லேன்
எல்லா மறிந்தநீ யறியாத தன்றெனக்
கெவ்வண்ணம் உய் வண்ணமோ
இருளையிரு ளென்றவர்க் கொளிதா ரகம்பெறும்
யெனக்கு நின்னருள் தாரகம்
வல்லானெனும் பெயருனக் குள்ளதே யிந்த
வஞ்சகனை யாள நினையாய்
மந்திரகுருவே யோக தந்திரகுருவே மூலன்
மரபில்வரும் மௌன குருவே. (4)

சிவன் செயலாலே யாதும் வருமெனத் தேறேன் நாளும்
அவந்தரு நினைவை யெல்லாம் அகற்றிலேன் ஆசைவெள்ளம்
கவர்ந்து கொண்டிழுப்ப அந்தக்கட்டிலே அகப் பட்டையோ
பவந்தனை ஈட்டிஈட்டிப் பதைக்கின்றேன் பாவியேனே. (5)

[ந்து
தன்னையொருவர்க் கறிவரிதாய்த்தானே தானுய்எங்கும்நிறை
உன்னற்கரிய பரவெளியாய் உலவாவமுதாய் ஒளிவிளக்காய்
என்னுள்கலந்தா யானறியா திருந்தாய் இறைவா இனியேனும்
நின்னைப் பெருமாறெனக் கருளாம் நிலையைக் கொடுக்க
நினையாயோ. (6)

எண்ணுத எண்ணமெல்லாம் எண்ணி எண்ணி மூட்டைகட்டி
என்குருநாத புண்ணுகச்செய்த பிழைபோதும் பரசிவமே.(7)



உ

## குரு ஸ்துதி,

ஐயமின்றி ஆவிஉடல் பொருள் மூன்றும்
ஆண்டவனே உன்னவையென் றளித்துப் பின்னும்
துய்யகுருநாதனுக்கே அடிமையாகிச்
சொன்னபடி கேட்பதற்குத் தொண்டனுகி
மெய்யென்று அவர்மனம் களிக்கமட்டும்
வேண்டியதோர் சோதனைக்கு மிதந்திடாமல்
செய்யதிரு மலரடியில் காத்திருந்தால்
செவியதனில் உபதேசம் செய்வார் தாமே.



## பஜனை.

அந்தரத்திலே ஜொலிக்கும் சச்சிதானந்தம்
என்னையன்புடனே ஆதரிக்கும் சச்சிதானந்தம். (1)

யாருமறியா விடத்தில் சச்சிதானந்தம்-தான்
அந்தரங்கமாய்ப் பணிவேன் சச்சிதானந்தம். (2)

அன்பருக்குள் ளிருக்கும் சச்சிதானந்தம்
எனக்கறிவான வழிகாட்டும் சச்சிதானந்தம். (3)

சஞ்சலத்தைத் தீருமையா சச்சிதானந்தம்
என்னைத்தானே தாஞக்குமையா சச்சிதானந்தம். (4)

சிப்பியினுள் முத்துப்போல சச்சிதானந்தம்
தேசதேகமெங்குமே விளங்கும் சச்சிதானந்தம். (5)

வறுமைப் பிணியகற்றும் சச்சிதானந்தம்
மருந்தெனக்குத் தாருமையா சச்சிதானந்தம். (6)

துயரத் தழுந்துகின்றேன் சச்சிதானந்தம்
அந்தவிபர மறியாமலே சச்சிதானந்தம். (7)

பந்தவிரு ளகற்றும் சச்சிதானந்தம்
உந்தன்பாதம் பணியவையும் சச்சிதானந்தம். (3)

சுந்தரத்திரு வடியை சச்சிதானந்தம்
தொழுது வணங்கவையும் சச்சிதானந்தம். (9)

இச்சையெங்கு மில்லாமலே சச்சிதானந்தம்
அருளின்பமதில் சேர்த்திடுவாய் சச்சிதானந்தம். (10)

அடிபணிந்தேன் அடிபணிந்தேன் சச்சிதானந்தம்
எனையாட்கொண் டருளுமையா சச்சிதானந்தம். (11)





## வாழ்த்து.

வாழிசோபனம் வாழி நல்லன்பர்கள்
சூழவந்திடும் தோற்றமும் சோபனம்
ஆழிபோல் அருள்ஐயன் மௌனத்தால்
ஏழையேன் பெற்ற இன்பமும் சோபனம்.

(தாயுமான சுவாமிகள் பாடல்.)

# பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 3 | 5 | பெண்ப்போல் | பெணைப்போல் |
| 4 | 8 | வீடளித்றுக் | வீடளித்துக் |
| ,, | 18 | மாக்ஷீமை | மாக்ஷிமை |
| 14 | 16 | நித்தியாசஞ் | நிதித்தியாசஞ் |
| 20 | 12 | அயலறவே | றயல்றவே |
| 21 | 21 | மகாமெல்லா | மகிமெல்லா |
| 22 | 1 | நீககிப் | நீக்கிப் |
| ,, | 9 | விமலதாய் | விமலமதாய் |
| ,, | 12 | நீங்கியசற் | நீக்கியசற் |
| ,, | 16 | மரணபர | மானபர |
| 26 | 11 | மிஞ்சதலான் | மிஞ்சுதலான் |
| 33 | 4 | குருபரக்கன்னி | குருபரக்கண்ணி |
| 37 | 10 | யையாநீ | பையாநீ |
| 40 | 10 | பொறுக்குமேம | பொறுக்குமோ |
| 50 | 4 | அன்பரிடத்திலமாந்த | அன்பரிடத்திலமர்ந்த |
| 53 | 11 | கடலாவண்டி | கடலானவண்டி |
| 64 | 4 | முந்தியடைந்தோமென் | முக்தியடைந்தோமென் |
| ,, | 13 | அந்திரத்திலோடு | அந்தரத்திலோடு |
| 70 | 3 | பெல்லாததெத்தனை | பொல்லாததெத்தனை |
| 71 | 4 | புளங்காங்கித்து | புள்காங்கித்து |
| 74 | 11 | வேறென்ற | வெறென் |

